




நவம்பர்] சமய பாட போதனைத் திங்களிதழ் [1975

மயிலும் ஆடி, நீயும் ஆடி
வரவேணும்

அருணகிரிநாதர்

**தமிழ்நாடு தெய்விகப் பேரவை**
9, மகாராஜா சூரியராவ் சாலை
சென்னை - 600018,

உ

# அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி

## திருக்கோயில், பழனி

பழனி ஞானதண்டாயுதபாணியைப் பணிந்திட வாரீர்!
அழகான திருமுருகன் அருள் பெறவே திரண்டு வாரீர்!
செந்தேனும் பாலும் மணக்கும் சேயோனை வழிபட வாரீர்!
சந்தன விபூதி மணக்கும் திருமேனி கண்டு மகிழ வாரீர்!

முடிக்காணிக்கை தரத் தனியிடம்!
தங்குவதற்கேற்ற வசதிகள்!
முதியவரும் முடியாதோரும் முருகன் அருகே செல்ல
இழுவை ரயில் வசதி!
பொங்கியெழும் பேரழகனைத் தாங்கிவரும் தங்கரதம்
காண வசதிகள்!

அத்தனையும் செய்து அழைக்கிறது பழனித் திருக்கோயில். தமிழ்க்கடவுளாம் கந்தப்பெருமானின் அருள்பெற்று, அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக் கோயில் கண்காணிப்பில் கீழே கண்ட நிறுவனங்கள் நிர்வகிக்கப்படுகின்றன.

1. அருள்மிகு பழனியாண்டவர் கலைக்கல்லூரி
2. அருள்மிகு பழனியாண்டவர் இந்தியப் பண்பாட்டுக்கல்லூரி
3. அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக்கல்லூரி
4. அருள்மிகு பழனியாண்டவர் செந்தமிழ்க் கல்லூரி
5. கார்த்திக்பள்ளி (ஆங்கிலப்போதனை)
6. செவிடர்பள்ளி
7. நாதசுரக் கல்லூரி
8. வேத ஆகமப்பாடசாலை
9. அன்புஇல்லம் (அனாதை விடுதி)
10. முதியோர் இல்லம்
11. குழந்தைகள் காப்பகம்
12. மருத்துவமனை

பழனித் திருமலையில் நாளும் பெருகிவரும் பக்தர்கட்குப் போதிய வசதிகள் செய்து தருவதற்காக 60 லட்சரூபாய் செலவில் மாபெரும் திருப்பணித் திட்டம் செயல்பட உள்ளது.

திரு. கே. சின்னப்பன்,
அறங்காவலர் குழுத் தலைவர்.

திரு. அ. தமிழரசு,
அறங்காவலர்.

திரு. இரா. சின்னதுரை.
அறங்காவலர்.

திரு. சி. எஸ். தீனதயாளு பி.எஸ்சி., பி.எல்.,
துணை ஆணையர்-நிர்வாக அதிகாரி




ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு

மணி 4 | திருவள்ளுவர் ஆண்டு 2006, இராக்கத கார்த்திகை, 1975 நவம்பர் | ஓசை 5

அருளோசை அன்பர்களுக்கு வணக்கம்.

இந்த இதழில் சில தவிர்க்க முடியாத காரணத்தால் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் 'திருக்குறள் தேசிய நூல்' என்ற தொடர் கட்டுரையும், எழுத்துப் பட்டி மன்றப் பகுதியும் இடம் பெற முடியவில்லை. அடுத்து வரும் இதழ்களில் தொடர்ந்து அப் பகுதிகள் இடம் பெறும் என்பதை முதற்கண் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த இதழில் தலைவர் தவத்திரு அடிகளார் அவர்களும், சீலத்திரு ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களும் சிந்தனைக்கு விருந்தளிக்கிறார்கள்.

திருமலைநல்லான் சக்கரவர்த்தி அவர்கள் திருமங்கையாழ்வாரின் ஊடலைப் படம் பிடித்துக்காட்டியுள்ளார்.

டாக்டர் அ. மா. பரிமணம் அவர்கள் புதிய கோணத்தில் திருமுறையை அறிமுகம் செய்து வைக்கிறார்.

'ஐயந்தெளிதல்' பகுதிக்கு வந்துள்ள வினாக்களுக்குத் தமக்கே உரித்தான பாணியில் திரு. டாக்டர் வை. இரத்தினசபாபதி அவர்கள் விடையளித்துள்ளார்.

படிப்போர் உள்ளத்தில் பசுமரத்தாணி போல் பதியும்வண்ணம் மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் கள்வனைக் காட்டும் பாடலில் தம் கைவண்ணத்தைக் காட்டியுள்ளார்.

குழந்தைகள் உலகம் ஏ. ஜி. சுப்பிரமணியம் அவர்கள் கல்வெட்டு'களில் காணப்படும் அருளாட்சிச் செய்தியினைச் சுருங்கச் சொல்லி விளக்கியுள்ளார்.

கச்சியப்பர் வரலாறு சித்திரப் படங்களுடன் வெளிவந்துள்ளது.

மற்ற பகுதிகள் வழக்கம் போல் சிறப்பாக அமைந்து உங்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்துகின்றன.

இதழைப் பற்றிய கருத்துக்களை எழுதி அனுப்பும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

சந்தா புதுப்பிக்கும் அன்பர்கள் தயை செய்து தங்கள் பழைய சந்தா எண்ணையும், முழு முகவரியையும் தெளிவாக எழுதும்படி கேட்டுக் கொள்கிறேன். நன்றி.

பதிப்பாசிரியர்.

# சென்னை
# வானொலியில் தேனொலி!

ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனித்து
கேட்கின்றவர்களை யெல்லாம் மெய்ஞ்ஞான
நாட்டமுற வைக்கின்ற திருவாசகத்தின்
திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி
பாடல்களுக்கு,
திருவாசக வழிபாட்டை வற்புறுத்தித் திக்கெட்டும் முழங்கு
கின்ற அருள்நெறித் தந்தை, நமது பேரவைத் தலைவர்




அவர்கள்

தேனினுமினிய திருவாசகத்தில் தோய்ந்துதோய்ந்து தாம் பெற்ற அனுபவத்தை
திருவெம்பாவை–திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களின் விளக்கவுரையாகத்
தருகின்றார்கள்! அனைவரும் கேட்டின்புறுக!

சென்னை-1. வானொலி நிலையம்
16-12-75 முதல் 14-1-76 முடிய நாள்தோறும் காலை 6–30 மணிக்கு



## இந்த இதழில்




*திருவளர் செல்வனுக்கு,*

*நல்வாழ்த்துக்கள்!*

சென்ற கடிதங்களில் சாங்கிய மதத்தைப் பற்றி எழுதியிருந்தோம். இந்தக் கடிதத்தில் யோகம், அதாவது சாங்கிய யோகம் என்ற மதத்தைப்பற்றி எழுதுகின்ேறாம். யோகம் என்ற மதம் குறிக்கோளால் சாங்கிய மதத்தோடு ஒத்தும் அதேபொழுது கடவுள் நம்பிக்கையில் மாறுபட்டும் விளங்கும் மதம். நிறைந்த உடன்பாடு இருப்பதால் சாங்கிய யோகம் என்று இதனைக் கூறுவர். இந்த யோக மதத்திற்குப் பதஞ்சலியை ஆதி ஆசிரியன் என்று கூறுவர். ஆனாலும் இது வரையறுக்கப்பட்ட கருத்தல்ல. ஆயினும், யோக மதத்தைப்பற்றி இன்று நமக்குக் கிடைக்கும் நூல் இந்தப் பதஞ்சலி முனிவர் இயற்றிய யோக சூத்திரமாகும். ஆன்மீகத் தத்துவ ஞானத்தில் நிறைந்த அறிவு பெற வேண்டுமென விரும்புகிறவர்கள் யோக சூத்திரத்தைப் படிப்பது அவசியம். இந்த யோக சூத்திரத்துக்கு வியாசர் சிறந்த விரிவுரை செய்துள்ளார்.

உயிர், பிரகிருதியின் வலையில் சிக்கிக் கொண்டு விட்டது; இல்லை, பிரகிருதி உயிரைத் தன் வலையில் சிக்க வைத்து விட்டது. இது எப்படி? எதனால்? என்ற வினாக்களுக்கு சாங்கியத்தில் விடை கிடைக்கவில்லை. இங்ஙனம் பிரகிருதியின் வலையில் சிக்கிய புருடன் அல்லது உயிர், பிரகிருதியிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு தனது உண்மையான அறிவு வடிவத்தை எய்துதல் சாங்கியத்தின் கொள்கை. யோகத்திற்கும் அதுவே கொள்கை. யோக மதத்தினர் யோகம் என்ற சொல்லுக்குப் பிரிதல் என்ற சொல்லைக் கற்பிக்கின்றனர். அதாவது, உயிர் பிரகிருதி சம்பந்தத்திலிருந்து பிரிதல் என்பதே பொருள். ஆனால், உபநிடதங்களில் யோகம் என்ற சொல்லுக்குப் பொருள் சேர்தல் என்பது. அதாவது, உயிர் பரம்பொருளோடு சேர்தல் என்பது கருத்து. ஆனால், சாங்கிய யோகம் மறுதலையாகப் பொருள் சொல்கிறது.

திருவளர் செல்வ, சாங்கியம் கொள்கைகளை விளக்குகிறது. யோகம், அக்கொள்கைகளின் நடைமுறைகளை—வாழ்க்கையில் மேற்கொள்ளும் வழிமுறைகளை விளக்கிக் கூறுகிறது. சாங்கியம், ''தத்துவங்களை உள்ளவாறு அறிகின்ற அறிவே ஞானம், அதுவே புருடனின் இலக்கு'' என்று கூறுகிறது. ஆனால், யோகம் தியானத்தை வற்புறுத்துகிறது. திருவளர் செல்வ, யோகம் ஒரு வாழ்க்கை முறை. யோக நெறியில் நிற்பவர் சித்தத்தில்

சுத்தம் ஏற்படவேண்டும். அதாவது சிந்தனையில் தூய்மை அவ்வழி "நான்" "எனது" என்ற நினைவு அறவே அகல வேண்டும். "நான்" "எனது" என்ற சொற்களின் வாசனைகூட யோக சமயத்திற்கு ஆகாது. இந்தச் சித்த சுத்தியை எளிதில் பெறுதல் இயலாது. வாழ்க்கையில் படிப்படியாகப் பல பழக்கங்களை மேற்கொள்ள வேண்டும். இந்தப் பழக்கங்களை யோகமதம் எட்டாக வகுத்துக் கூறுகிறது. அவை எட்டு அங்கங்கள் என்று வழங்கப்பெறும். சித்த சுத்தத்திற்கு உரியதாகிய உள்ளத்தைத் தூய்மைப்படுத்த முதலில் உடலைக்கட்டுப்படுத்த வேண்டும். உடலைக் கட்டுப்படுத்த யமம், நியமம் என்ற இருவிதிகள் கூறப்பெற்றுள்ளன. இவை விளைவுகளை நெறிப்படுத்தத் துணை செய்வன. இவற்றுள் யமம் என்பது எதிர்மறையால் விதிப்பது. அதாவது, செய்யத் தகாதனவற்றை விதிப்பது. சிறப்பாகப் பிற உயிர்களுக்குத் துன்பம் செய்யாமை பொய் பேசாதிருத்தல்; களவாடாமை; உடைமைகளைப் பெருக்காமை ஆகியன செய்யத் தகாதன என்று விதிக்கப் பெற்றவை. திருவளர் செல்வ, கிறித்து பிறப்பதற்குப் பல நூற்றுண்டுகளுக்கு முன்பே தோன்றிய இந்திய தத்துவ ஞானங்களில் ஒன்று, உடைமைகளைப் பெருக்கல் தீது என்று சொல்லியிருக்கும் சமுதாய உணர்வு அறிந்து பாராட்டத்தக்கது. தெளிவாகச் சொன்னல் உடைமைகளைப் பெருக்காமை என்ற சீலத்தை மேற்கொண்டாலே மற்ற தீ நெறிகளும் வந்து சேரா; நன்னெறி வந்து பொருந்தும். அடுத்து நியமம் என்பது உடன்பாட்டு முறை. ஒழுகுதற்குரிய நெறிகளை வகுத்துக் கூறுவது. அவையாவன: தூய்மை, திருப்தி என்ற மனநிறைவு, நல்விழைவு, தத்துவஞான நூல்களைக் கற்றல் என்பனவாம். இவைகளை நெறிப்படுத்த - உடல், உள்ளங்களைப் பழக்க ஆசனம், பிராணுயாமம் ஆகியவற்றை மேற்கொள்ள வேண்டும். ஆசனம் என்பது குறிப்பாக உட்காரும் முறையை விளக்குவது. ஆயினும், உடலை நல்வழியில் பழக்க–பக்குவப்படுத்தத் துணை செய்வது. பிராணுயாமம் என்பது அகநிலைத் தூய்மைக்கு மூச்சுக்களை முறைமைப்படுத்துதல். இத்தகைய பயிற்சிகளால் நமது புலன்கள் தன்னிச்சையாகச் சென்று வீழும் வீழ்ச்சிகளிலிருந்து தடுத்துப் பயனுறுதற்குரிய எழுச்சிகளில் புலன்களை நிறுத்தலாம். இங்ஙனம் செய்யும் பயிற்சிகளை பிரத்தியாகாரம் என்று யோகம் கூறும். வானின்று பொருள் இழிதல்போல நமது புலன்கள் தமக்குரிய சுவைப்பொருள்களில் தாமே வீழ்வதைத் தடுத்து நிறுத்தும் ஆற்றல் கைவரின் மனத்தை ஒருநிலைப்படுத்தலாம். மனம், ஒருநிலைப்படுதலை யோகம் தாரணம் என்று கூறுகிறது. இந்த நிலையை எய்திய உயிர் சாங்கிய யோக உண்மைகளை ஊன்றித் தியானிக்க முடியும் என்பது யோகத்தின் முடிபு. இங்ஙனம், தியானிப்பதின் பயனுக விளைவதே சமாதி என்று கூறப்படுகிறது. இந்தச் சமாதி, அறிவு போன்றவற்றை அடுத்த திருமுகத்தில் விளக்குவோம்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு.

இன்றக்குடிகள்

"சமுதாயம் வாழ்ந்தால் சமயம் வளரும்!"

ஓம்

# சம்பந்தக் கூத்தன்

பேராசிரியர் சபாரத்தினம், எம்.ஏ., பிஎஸ்ஸி.,
(சம்பந்த சரணாலயன்)

(சென்ற இதழ் தொடர்ச்சி)

" பானல்வயல் தமிழ்நாடு
பழிநாடும் படிபரந்த
மானமிலா அமணென்னும்
வல்லிருள்போய் மாய்வதனுக்
கானபெரு கொளிப்பரப்பால்
அண்டமெலாம் கொண்டதொரு
ஞானமணி விளக்கெழுந்து
வருவதென நலம்படைப்ப "
(திருஞானசம்பந்தர் புராணம்-652)

என்று பெருமானை ஞானமணி விளக்காக உருவகப்படுத்தி உள்ளமெல்லாம் இனிக்கப் பாடும் சேக்கிழார் பெருமானுக்கு அண்டங் களெல்லாவற்றையும் அள்ளி எடுத்துப் பரிசாகத் தந்தாலும் நம் உள்ளம் அமைவு பெருது. ஈடிணை கூறுதற்கியலாத மிக உயர்ந்த பாடல் இது.

எனவே, சிவபெருமானின் பேரொளியாகிய திருஞானசம்பந்தரையே 'சம்பந்தக் கூத்தன்' என்று வரும் திருமந்திரத்தொடர் குறிக் கின்றது என்று பொருள்கொள்வது பொருத்த முடையதேயாம்.

இனி 'சம்பந்தக் கூத்தன்' என்ற தொடரின் தத்துவப் பொருளை நோக்குவோம். 'உயிர் களோடு உறவுபூண்டு திருக்கூத்தியற்றுபவன்' என்பது இதன் பொருள்.

ஞானனந்தம் என்பதையே வடிவமாக உடையவன் நற்றமிழ்ப் பெருமானாகிய குகன். நுண்ணிய நிலையில் இவன் எப்படியெல்லாம் விளங்குகின்ருன் என்பதை ஞானத்தமிழ் நூல்கள் (சிவாகமங்கள்) நன்கெடுத்துக் கூறு கின்றன. "இவன் அதிசூக்கும (மிகவும் நுண்ணிய)ப் பொருளாக விளங்குபவன்; வாடுதல், வேறுபடுதல், பிறத்தல், இறத்தல், புதுமை, பழைமை முதலிய விகாரங்கள் இல்லா தவன்; மிகவும் தூய்மையான வாழ்வுடையவன்; ஒளிமயமாக விளங்கும் ஞானுகாசமாக விளங்கு பவன்." (தகராலய ரகசியம் பக்-52). ஞானகாசம் என்பது சிதாகாசம். இது உயிரின் அறிவுக்கு அறிவாக விளங்குவது. இச்சிதாகாசத்திலேயே பரம்பொருளின் உயிர்க்கூத்து (சம்பந்தக் கூத்து) நிகழ்கின்றது. அதாவது உயிர்க் கூத்து என்பது சிதாகாச நடனமே.

" எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக் கேள்......"

என்று 'உண்மை விளக்கம்' எனும் சித்தாந்த நூலில் கூறப்படுகிறது. எட்டும் இரண்டும் என்பது பத்து. பத்தைக் குறிக்கும் எழுத்து 'ய'. திருவைந்தெழுத்தில் 'ய' என்பது ஆன்மாவைக் குறிப்பது. எனவே உயிரில் நிகழ்கின்ற கூத்து என்பது பொருள். இறைவன் சூரியன் உள்ளேயிருந்து கொண்டு சூரியனை இயக்குவதுபோல ஆன்மாவின் உள்ளேயிருந்து கொண்டு ஆன்மாவை இயக்கு கின்ருன். இது பிருகதாரண்யக உபநிடதக் கருத்து. எனவே ஆன்ம இயக்கமே உயிர்க் கூத்து எனக் கொள்ளவேண்டும்.

இந்த உயிர் அல்லது ஆன்மா என்பது சோதிலிங்கம். 'தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்' என்கிருர் திருமூலர். சோதி லிங்கத்தினுள்ளே சுயம்புவாகிய (தானே தோன்றியதாகிய) ஓர் ஆகாயம் உண்டு. இதுவே குகன் என்று வழங்கப்படும். முருகப் பெருமானின் நுண்ணிய வடிவம் இவ்வாறு நூல்களில் விளக்கப்படுகின்றது. அறிவுக் கறிவாக விளங்கும் முருகனாகிய திருஞான சம்பந்தர் இங்ஙனம் ஆன்மாவில் விளங்கும் ஒளியாகவே (லிங்கமாகவே) காட்சியளிக் கின்ருர். தம் திருமண நிகழ்ச்சியின்போது அவர் சிவச்சோதியில் கலந்து ஒன்ருகியதையும் நாம் நினைவுகூர்ந்து கொண்டால் திருஞான சம்பந்தர் ஆன்மாவைச் சுற்றி விளங்கும் ஒளி வடிவானவர் என்பது நன்கு தெளிவாகும்.

அருணகிரிப் பெருமான் இத்தகைய ஆன்ம ஒளியின் விளக்கமாகவே திருஞானசம்பந்தரைக் கண்டு வழிபடுகின்ருர்:

"வற்ரு மதுக்கருணை யுற்றே மறைக்கலைகள்
ஒதித் தெரிந்துதமிழ் சோதித் தலங்கலணி
யத்தா பரத்தையறி வித்தா விசுற்றுமொளி
யாகிப் பரந்தமணி வேல்தொட் டமைந்தபுய
வர்க்காமருப்புழுகு முட்டா திருப்பழநி
வாழ்வுக் குகந்தடியர் 'ஆவிக்குள் நின்றுலவி'
வருபெருமாளே"

என்பது பழநித் திருப்புகழ். இதில் 'ஆவி சுற்றும் ஒளி' என்பது குகப்பெருமான் ஆன்மாவில் நிகழ்த்தும் திருக்கூத்தினையே குறிக்கும். 'ஆவிக்குள் நின்றுலவி' என்றும் வருவது கவனிக்கத்தக்கது.

உயிரோடு உறவு பூண்டு கூத்தியற்றுபவன் சம்பந்தக்கூத்தன். திருஞான சம்பந்தருக்கு இக்கருத்து எவ்வாறு பொருந்துகின்றது என்பதையே இதுவரை கண்டோம்.

**திருப்பதிகங்கள் ஆடற்கலைக்குரியவையே :**

பரதசாத்திர முறைப்படித் திருநடன மிட்டுத் திருப்பதிகங்கள் அருளிய திருஞான சம்பந்தர் கூத்தப்பெருமானே ஆவர். தாம் அருளிய திருப்பதிகங்கள் ஆடற்கலைக்குரியவை என்பதை அவர் பல திருக்கடைகாப்புச் செய்யுள்களில் ஆணையிட்டருள்கிருர்.

"பொந்தின்னிடைத் தேனூறிய
பொழில்சூழ்புள மங்கை
அந்தண்புனல் வருகாவிரி
ஆலந்துறை யானைக்
கந்தம்மலி கமழ்காழியுட்
கலைஞானசம் பந்தன்
சந்தம்மலி பாடல்சொலி
ஆடத்தவ மாமே"
(முதலாம் திருமுறை)

"விண்ணியல்விமானம் விரும்பிய பெருமான்
வெங்குரு மேவியுள் வீற்றிருந் தாரை
நண்ணிய நூலன் ஞானசம் பந்தன்
நவின்றஇவ் வாய்மொழி நலம்மிகு பத்தும்
பண்ணியல்பாகப் பத்திமையாலே
பாடியும் ஆடியும் பயிலவல்லோர்கள்
விண்ணவர் விமானம் கொடுவர ஏறி
வியனுல காண்டுவீற் றிருப்பவர் தாமே"
(முதலாம் திருமறை)

"கருகமுந்நீர் திரையோதமாரும் கடற்காழியுள்
உரகமாரும் சடையடிகள் தம்பால்
உணர்ந்துறுதலால்
பெருகமல்கும் புகழ்பேணும் தொண்டர்க்
கிசையார்தமிழ்
விரகன்சொன்ன இவைபாடி யாடக்
கெடும் வினைகளே" (2ஆம் திருமுறை)

இவ்வாறு பல திருப்பதிகங்களில் திருஞான சம்பந்தர் பாடியும் ஆடியும் ஆணையிடுகின்ருர். திருநாவுக்கரசரின் தேவாரத் திருமுறைகளுள் ஆரும்திருமுறை நாட்டியக்கலைக்கே உரிய திருமுறை என்று துணிந்து கூறலாம். ஆளுடை நம்பிகளும் தம் திருப்பதிகங்கள் ஆடற்கலைக்கும் உரியவை என்று பல இடங்களில் கூறியருள்கிருர். இன்றைய நாட்டிய உலகம் தேவாரத் திருமுறைகளுக்கு முதலிடம் கொடுக்கவேண்டியது மிகவும் இன்றியமையாதது. இசையும் அபிநயங்களும் பொருந்த இத்திருமுறைகள் இசைக்கப்படும்பொழுது ஏற்படும் இறையனுபவத்தை உணர்ந்து மகிழலாமே தவிர உணர்த்திக் காட்ட முடியாது. நாட்டியக்கலைக்குரிய ஒப்பற்ற புதையலை இன்றைய நாட்டிய உலகம் நன்கு கவனிக்கவில்லை என்றே தோன்றுகிறது. பலவிதமான குதர்க்க எண்ணங்களுக்கும் குறுகிய நோக்கங்களுக்கும் அந்தப் புதையலும் இரையாகின்றது; நாட்டிய உலகும் இரையாகின்றது! சம்பந்தக் கூத்தன் இரண்டையும் காப்பாற்றுவாஞக.

திருஞான சம்பந்தரை பக்தியுலகம் ஆடற்கலைக்குரிய தெய்வமாகவே கருதி வருகிறது. சீகாழித் திருக்கோயிலில் காணப்படும் கல்வெட்டு ஒன்று 'திருநட்டப்பெருமான் ஆளுடைய பிள்ளையார்' என்று திருஞான சம்பந்தரைக் குறித்துக் கூறுகின்றது. ஆச்சாள் புரத்தில் (திருநல்லூர்ப் பெருமணம்) திருஞான சம்பந்தர் திருக்கோட்டத்தில் தாண்டவ மூர்த்திக்குரிய யந்திரம் (சக்ரம்) பிரதிட்டை செய்யப்பட்டிருக்கிறது. நடன ஞானசம்பந்தரின் விக்கிரகம் ஒன்று அண்மைக்காலம் வரையில் சென்னை கோட்டைக் கண்காட்சிச் சாலையில் இருந்ததாகத் தணிகைமணி செங்கல்வராயப்பிள்ளை அவர்கள் குறிப்புரை தருகின்ருர். எனவே பக்தியுலகத்தைப் பொறுத்த வரையில் திருஞானசம்பந்தப் பெருமான் கூத்தப்பெருமானே ஆவார்.

தில்லையம்பலவாணர், முருகன், திருஞான சம்பந்தர்-மூவரும் ஒரே பரம்பொருள் என்ற பாவனையை நம் மனத்தில் ஆழப்பதிய வைக்கும் திருப்புகழ் ஒன்று உண்டு. அத்திருப் புகழை மீண்டும் மீண்டும் ஓதிப் பயன்பெறு வோமாக. திருஞானசம்பந்தக் கூத்தப் பெருமானின் வற்ரு மதுக்கருணையை நம்மிடத்தே கொழிக்கச் செய்யும் அத்திருப் புகழை அவர் திருவடிகளுக்கே அர்ப்பணிப் போம்.

"மகரமொ டுறுகுழை யோலை காட்டியும்
மழைதவழ் வனைகுழல் மாலை காட்டியும்
வரவர வரஇதழ் ஊறல் ஊட்டியும்
வலைவீசும்

மகரவி ழிமகளிர் பாடல் வார்த்தையில்
வழிவழி யொழுகுமு பாய வாழ்க்கையில்
வளமையில் இளமையில் மாடை
வேட்கையில் மறுகாதே

இகலிய பிரமக பால பாத்திரம்
எழில்பட இடுதிரு நீறு சேர்த்திறம்
இதழியை அழகிய வேணி யார்த்ததும்
விருதாக

எழில்பட மழுவுடன் மானு மேற்றதும்
இசைபட இசைதரு ஆதி தோற்றமும்
இவையிவை எனவுப தேசம் ஏற்றுவ
தொருநாளே

ஜகதலம் அதிலருள் ஞான வாட்கொடு
தலைபறி யமணர்ச மூக மாற்றிய
தவமுனி சகமுளர் பாடு பாட்டென
மறைபாடி

தரிகிட தரிகிட தாகு டாத்திரி
கிடதரி கிடதரி தாவெ ஞச்சில
சபதமொ டெழுவன தாள வாச்சியம்
உடனே நீள்

அகுகுகு குகுவென ஆளிவாய்ப்பல
அலகைகள் அடைவுடன் ஆடு மாட்டமும்
அரனவனுடனெழு காளி கூட்டமும்
அகலாதே

அரிதுயில் சயனவி யாள மூர்த்தனும்
அணிதிகழ் மிகுபுலி யூர்வியாக்ரனும்
அரிதென முறைமுறை யாடல் காட்டிய
பெருமாளே!

(மாடை-பொன்; இதழி-கொன்றை; வேணி-சடைமுடி; ஞானமாகிய வாள்கொண்டு அமணர் கூட்டத்தைச் சிதைத்தார் திருஞான சம்பந்தர்; மறைபாடி-மறைத்தமிழ் அருளியவனே!; சபதம் - சப்தம் - ஒலி; வாச்சியம் - வாத்தியம்; அலகை-பேய்; சயனவியாள மூர்த்தன்-பாம்புரு வான பதஞ்சலி; வியாக்ரன்-புலிப்பாணி முனிவர்; இவ்விருவரும் 'அரிது, இது வெகு அருமை' என்று பாராட்டும்படி ஞானசம்பந்த முருகன் நடனமாடியருளினர் என்பது கருத்து. தமக்கு உபதேசித்தருளுமாறு வேண்டுகின்ருர் அருணகிரிப் பெருமான்.)"

## பேரவைக் கொடிகள் விற்பனைக்குத் தயார்

பேரவைக் கொடிகள் தலைமையகத்தில் அடியிற் கண்டுள்ள வகையில் விற்பனைக்குத் தயாரில் இருக்கின்றன. பேரவைக் கிளைச்சங்கங்கள் தங்களுடைய தேவைக்கு உடன் உரிய தொகையுடன் எழுதும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறது.

| | | | |
|---|---|---|---|
| 12" × 18" | அளவு கொண்ட கொடியின் | விலை ரூ. | 4-00 |
| 18" × 24" | ,, | ,, | 5-50 |
| 24" × 36" | ,, | ,, | 9-50 |

செயலாளர்




### சுவைப்பதில்லை......

தவத்திரு அடிகளார் அவர்களின் கட்டுரைகள் இடம் பெருத "அருளோசை" சுவைப்பதில்லை.

—ா. ஏகாம்பரம், சென்னை-1.

### ஐயத்தில் ஐயம்......

"ஐயந்தெளிதல்" பற்றிய அறிவிப்புகள் மட்டும் வருகின்றன. பகுதியை இன்னும் தொடங்கக் காணுமே!

—ச. துரைசாமி, காவனூர்.

(அன்பரின் ஐயம் இவ்விதழில் தெளிவாக்கப் பட்டிருக்கிறது-ஆசிரியர்)

### எளிமை... இனிமை... சுவை

'நம்மாழ்வாரின் வேண்டுகோள்' என்னும் பகுதி மிகவும் நன்ருக இருந்தது. குன்றக்குடி அடிகளாரின் "திருக்குறள்-தேசீய நூல்" என்னும் கட்டுரை எளிமையாகவும் இனிமையாகவும் உள்ளது. 'பிறவாமை வேண்டும்' என்னும் பகுதி இன்னும் சிறிது சுவையாக இருக்கலாம்.

திருமதி. சம்பூரணம், குரோம்பேட்டை

### கதிரொளி கிடைக்குமா?

பேரவையில் "செய்திக்கதிர்" ஒன்று வெளிவருகிறதாமே? சங்கங்களுக்கு மட்டுமா? எங்களுக்கும் உண்டா?

—பெ. சாத்தையா, மாவடிப்பட்டி.

(பேரவைத் திருத்தொண்டுகள், கிளைச்சங்க நிகழ்ச்சிகள் "செய்திக்கதிரில்" இடம் பெறுகின்றன. ஆண்டுச் சந்தா ரூ. 3/-கட்டினல் உங்களுக்கும் கிடைக்கும்-ஆசிரியர்)

### இணையற்ற தொண்டு......

'ஆழ்வாரின் ஆழ்ந்த அனுபவம்' என்ற கட்டுரை எளிமை, இனிமை கொண்டு அருமையாக அமைந்துள்ளது... இம் மாதிரியான கட்டுரையால் 'அருளோசை' எளிதில் எல்லா மக்களையும் ஈர்த்து இணையற்று விளங்குகிறது.

—டி. தாமரைச்செல்வி எம். ஏ. ஒரத்தநாடு.

### சேவையின் தேவை......

இன்றைய உலகுக்கு இது போன்ற பத்திரிகை கண்டிப்பாகத் தேவை.

—பி. தாணுப்பிள்ளை, காக்குமூர்.

### அச்சகத்தில் வேலை அதிகமோ?

பேரவை அச்சகத்தில் வேலை மிக அதிகமோ? அருளோசை மிகத் தாமதமாக வருகிறதே?

—க. அன்பழகன், சாந்தோம்.

(ஆம். மார்கழி வருகிறதல்லவா? திருவெம்பாவை திருப்பாவை ஒன்றரை லட்சம் அச்சாகிக் கொண்டிருக்கின்றன—ஆசிரியர்)

## விஞக்கள்

விஞக்கள் இந்த இதழ்க் கட்டுரைகள் பற்றியனவே ஆகும். விடைகளை முழு அளவு (Foolscape size) இரண்டு தனித் தாள்களில் நான்கு பக்கத்திற்குள் எழுதி இச்செயலகத்திற்கு கிடைக்கும்படி அனுப்பி வைக்க வேண்டும். சந்தா எண், பெயர், வயது, முகவரி இவற்றைத் தெளிவாக எழுதி அனுப்பவேண்டும்.

1. சாங்கியம், யோகம்-இவற்றுக்கிடையேயுள்ள ஒற்றுமை-வேற்றுமைகளை விளக்குக?
2. 'சம்பந்தக் கூத்தன்' என்ற தொடரின் தத்துவப் பொருளைச் சுருக்கமாக எழுதுக?
3. வழிபாடு, வேள்வி எத்தனை வகைப்படும்? அவற்றை விவரிக்க?
4. கண்ணனுக்குப் பரிசு அனுப்பி மகிழ்ந்தவர்கள் யார் யார்?
5. திருமுறையை வழிபடும் முறை எவ்வாறு தோன்றியது? அதன் பகுப்புமுறை பற்றி கட்டுரையாசிரியர் கருத்து என்ன?
6. சிவபெருமான் ஆதி கூர்மத்தைக் கொன்று மார்பில் அணிந்து கொண்டது ஏன்? வற்றலோடுகலனுப் பூண்டு' என்பதன் உட்கருத்தை விளக்குக?
7. வரலாற்றில் ஒளி விளக்காகத் திகழும் மாமன்னன் யாவன்? சிறந்த கருத்துக்கள் யாவை?
8. ஆழ்வாரின் பக்தியின் திறத்தை விவரிக்க?
9. 'சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே! நீ சூடிக் கொடாமல் இறைவன் சூடார்?—இதன் பின்னணியாக அமைந்த நிகழ்ச்சியை விளக்குக?
10. கந்தபுராண அரங்கேற்றத்தில் எழுந்த ஐயத்தை குமரப் பெருமான் எவ்வாறு நீக்கினன்?

உ

சிவமயம்

# நன்னெறி

சீலத்திரு. ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்

முற்கட்டுரையிலே பரசிவனைக் காட்டும் நன்மார்க்க ஞானம் எனக் கண்டோர்க்கு இது பெருவிளக்கந் தரும். சந்மார்க்கம் வடசொல். நன்னெறி தமிழ்ச் சொல். அந்நெறி அபரஞான நெறி, பரஞான நெறி என இருபிரிவாயுளது. உளதேனும் ஞானநெறி என ஒன்ருயே கொள்ளப்படும். பட்டும் அருணந்தி தேவ நாயனுர் சன்மார்க்கத்தை விளக்குமிடத்திலே, 'பதிபசு பாசந்தெரிந்து' என்றும் 'பரசிவனைக் காட்டும்' என்றும் இருபிரிவைத் தோற்றி யுணர்த்தியருளினர் ஆதலின், பதிபசு பாசந் தெரிக்கும் இயல்பும் பரசிவனைக் காட்டும் இயல்பும் ஞானத்திற்குள து [இயல்பு எழுவாய். உளது பயனிலே. "முதலெனப் படுவது நிலம் பொழுதிரண்டினியல்பு" என்புழிப் போலக் கொள்க.]

பதிபசு பாசந்தெரிக்கும் ஞானம் "பலகலை யாகம வேதம் யாவையினுங் கருத்துப் பதிபசு பாசந்தெரித்தல்'' என உமாபதி தேவநாயனு ரால், சிவப்பிரகாசத்தில் அருளப்பட்டதாலும் விளங்கிற்று. அத்தகு அபரஞானத்திற்குக் கருவியாய "வேத சாத்திர மிருதி புராண கலை ஞானம் விரும்ப சபை வைகரியாதித் திறங்கள் மேலா நாத முடிவான எல்லாம் பாசஞானம்'' எனப்பட்டன. படவே அவை அபரஞானம் அல்ல. அபரஞானத் தோற்றத்திற்குக் கருவிகளே யாவன ஆதலாற்ருன், ஒன்பதா வது சூத்திரத்தின்கண் கூறிய மூவேறு ஞானத் துள், முதலாய் நின்ற பாசஞானத்தை விளக்கிய வழிக் கூறப்பட்டன. பதிஞானத்துள் ஒரு பிரிவாய அபரஞானம் வேறு. அப் பாசஞானம் வேறு. இது மடவருக்கும் தோன்றலாகும். இது பதி, இது பசு, இது பாசம் என்று உணர்த் தும் உணர்வும் (சிவாகமஞானம்) அங்கனம் எழுத்து முதலிய கருவிகளாற் சொல்லும் நூலும் வெவ்வேருகும். அவ்வுணர்வு (ஞானம்) நூலாகாது. அந்நூல் உணர்வாகாது. மாயா காரியங்களான வன்னம் மந்திரம் பதம் மூன்றும் கொண்டாகிய வேத சாத்திராதி எல்லாம் பாச ஞானம் ஆகாது வேறு என்னகும்? பதிபசு பாசங்களைத் தெரிக்கும் ஞானம் பதிஞான மாகாது பாசஞானமும் ஆமோ? இனிப் பரஞானத்தை வழிபடுவோம்.

"கிரியையென மருவுமவை யாவும் ஞானம் கிடைத்தற்கு நிமித்தம் எனக் கிளக்கும்." உண்மைச் சரியையாளர்க்குச் சாலோக பதமும் உண்மைக் கிரியையாளர்க்குச் சாமீபமுத்தியும், உண்மை யோகத்தார்க்குச் சாருபசித்தியும் மருவியிடும்.

"உயர் ஞானம் இரண்டாம். (1) ஒன்று:- மாரு மலம் அகல(வும்) அகலாது மன்னு போதத் திருவருள். (2) ஒன்று:-அதனை (அத் திருவருளை)த் தெளிய ஓதும் சிவாகமம். இவ்விரண்டினுள் முதலாவது பரசிவனைக் காட்டும் ஞானம். இரண்டாவது பதிபசு பாசந்தெரிக்கும் ஞானம். மேலும், உமாபதி சிவம் அருளியதொன்றனை ஈண்டுக் கருதுதல் நன்று. 'கருத்திலுறை திருவருள்' என்று (பரசிவனைக் காட்டும்) ஒரு ஞானத்தையும் 'இறைவன் நூல்' என்று (பதிபசு பாசந்தெரிக் கும்) ஒரு ஞானத்தையும் கூறியருளினர்.

ஞானம், சரியை கிரியை யோகம் ஆய இறப்பில்லாத் தவங்களின் பயனக எய்து வது. அதனைச் சிவஞான போதப் பொருளுள் (சூ. 8) "முற்செய் தவத்தான் ஞானம் நிகழும்.'' மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோட்சத்தைக் கொடா'' என்றமையாலும் அறிக. அதன் மூலம், "இருவினையொப்பில் இறப்பில் தவத்தான் மருவுவனும் ஞானத்தை வந்து'' என்னுந் திருவெண்பாப் பகுதி. அதன் மூலம், "(தம் முதல் குருவுமாய்த்) தவத்தினில் உணர்த்த'' என்பது.

ஞானமும் தொடக்கத்திலேயே முற்றுப் பெற வாயாது. சிறிது சிறிதாகத்தான் எய்தும். சரியையில் எய்தும் ஞானத்தினும் நன்கு வளர்ந்தது கிரியையில் எய்தும் ஞானம். அக் கிரியையின் எய்திய ஞானத்தினும் பெருக வளர்ந்தது யோகத்தின் எய்திய ஞானம். இவ் வேறுபாட்டை,லோகம் சமீபம் ரூபம் என்னும் பதப்பேறு குறிக்கும் பெயர்ப் பொருளே காட்டும். இம் மூவழியால் வளர்ந்த ஞானமே நாலாவது ஞானமாகத் தொடங்கி வளர்கின்றது. இதனைப் பண்டார சாத்திரத்

துள் ஒன்றாய ''அநுபோக வெண்பா''வின் முடிவிலுள்ள திருவெண்பா சிலவற்றால் அறியலாம்.

ஞானபேதம், மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிர தரம் என்னும் நால்வகைச் சத்திநிபாதம் ஆகக் கூறு படுதலாலும் புலனாகும். ஆகவே முதிர்ந்து முற்றிய சத்திநிபாதத்தோர் ஞான சித்தர் ஆவர். தொடங்கி முயலுந்திறத்தோர் ஞான சாதகர் ஆவர். ஆசாரியர் சாதகர் என்னும் இருதிறனும் இதனைத் தெரிக்கும். ''சாதகர் ஆசாரியரும் ஆக்கி வீடு தருவிக்கும் உலோக சிவதருமிணி'' என்னுஞ் சித்திவசநமும் அறிக. 'சாதகாசாரியர்' என்றும் சில பதிப்பிற் பாடம் உண்டு.

ஞானசாதகர் கேள்வி (சிரவணம்) நினைவு (மநநம்) தெளிவு (நிதித்தியாசநம்) நிலை (நிஷ்டா) நான்கும் இன்றியமையாதவர். அக் கேள்வி இருதிறம். நூற்பொருட் கேள்வி, உணர்வுக் கேள்வி. அவ்விரண்டும் முறையே சாத்திர சிரவணம், ஞானசிரவணம் என்பன. சாத்திர சிரவணம் ஆசானை அடைந்து கேளாது தானே ஓதி அறிதல், ஓரளவு அறிவை அடை விக்குமே அன்றி ஒழுங்கும் உண்மையும் முடிந்த பயனும் அமையும் வகையில் அடைவிக்காது.

''சாத்திரத்தை யோதினர்க்குச்
சற்குருவின் நன்வசன
மாத்திரத்தால் வாய்க்கும் நலம்
வந்துறுமோ—ஆர்த்தகடற்
றண்ணீர் குடித்தவர்க்குத்
தாகம் தணிந்திடுமோ
தெண்ணீர்மையாய்
இதனைச் செப்பு.''

(திருக்களிற்றுப் படியார்)

இப்படி வேறு சிற்சிலரும் பாடினர். சற்குருப தேசம் சாத்திரத்திற்கும் ஞானத்திற்கும் அவசியமாகும். 'குருவில்லா வித்தை பாழ்' என்ற வசனமே இதனை மெய்ப்பிக்கும்.

சிவப்பிரகாசத்திலே, சிவஞானோபதேச கிரமம் உணர்த்தும் இடத்திலே, ஞான சிரவணத்தையும் ஞானமநநத்தையும் (ஞான) நிதித்தியாசனத்தையும் ஞான நிட்டையையும் ஞானகுரு மொழியாலுற்றுப் பயன் எய்தும் உண்மை நிலையை உணர்த்துகின்றார் உமாதேவ நாயனார். அதிலே, 'மொழிந்தவை' எனக் குருமொழியையும், 'ஒருமையாலே' என அத்துவித முத்தியுடைமையையும், 'முந்திய' என அம்முத்தியின் தலைமையையும் பிற சிறப்புக்களையும் குறித்தருளினார். கேட்டல் முதலிய நான்கும் உறும் ஞானபுத்திரர்க்கு வேண்டும் ஒன்றியிருந்து கேட்டிடல் நினைந் திடல் முதலியவற்றை நோக்கிய தொடக்க நிலையைக் குறித்த 'ஏகாக்கிர சித்தம்' உணர்த்து வதுமாகும். கேட்டல் முதலிய நான்கற்கும் முந்தியது ஒருமை. ஒருமையாலே மொழிந் தவை எனிற் குருவுக்கும், ஒருமையாலே கேட்டல் எனிற் சீடர்க்கும் ஏற்புடைத்தாதல் அறிக. கேட்டலைச் சார்த்தலினும் மொழிதலைச் சார்த்துதலே தக்கது.

“ முந்திய வொருமை யாலே
மொழிந்தவை (1) கேட்டல் (2) கேட்ட
சிந்தனை செய்தல் (3) உண்மை
தெளிந்திடல் (4) அதுதா னாக
வந்தவா றெய்த நிட்டை
மருவுதல் என்று நான்காம்.
இந்தவா றடைந்தோர் முத்தி
யெய்திய இயல்பி னோரே.''

இச்சிவப்பிரகாசத் திருவிருத்தம் ஆறு எனக் கொள்ள நிற்கும் வகையில் அச்சுப்புத்தகங் களிற் காண நிற்றலை நோக்கி வருந்துதல் அறிஞர்க்குளது. 'தருக்கசங்கிரகதீபிகை' (முனிவரது மொழிபெயர்ப்பு) முடிவிற் பிழை யின்றிக் காட்டப்பட்டிருக்கின்றது. துறைசைப் பதிப்புக்களிற் காண்க.

சாத்திர சிரவணம் நூற்கேள்வி, நூற்பொருட் கேள்வி, நூற்பொருட்சிந்தனை என மூன்றுண்டு. நூற்கேள்வி குருமொழியச் சீடன் மொழிதல். குருமொழிதல் ஓதுவித்தலும் சீடன் மொழிதல் ஓதுதலும் ஆகும். இருவர் கண்ணும் நூலிராது. நூலை வைத்துக் கொண்டு பார்த்துப் படிப்பது பாடமாகுமே அன்றிக் கேள்வி (சிரவணம்) ஆகாது.

ஞானநூறனை ஓதலும் ஓதுவித்தலும் முறையே ஞானநூல் படித்தலும் படிப்பித்தலும் ஆகா. படித்தல் வேறு ஓதுதல் வேறு. படிப்பித்தல் வேறு ஓதுவித்தல் வேறு.

ஞானசாதகம் புரியுமவர் ஞானநூல் ஓதல் முதலியவற்றையுடையோரும் அவை வேண்டா தாரும் என இருதிறத்தர். வேண்டாதார் ஞானத்திற்குச் சாதனமான ஞானசிரவணம் முதலிய மூன்றும் சாதிப்பவராவர். ஞானநூல் ஓதல் முதலியன மட்டும் உடையோர் அபரஞான சித்திக்குரிய சாதனங்களையுடை யோர் ஆவர். ஓதல் முதலியவற்றால் பதிபசு பாசந்தெரிக்கும் ஞானம் சித்திக்கும். பரசிவனைக் காட்டும் ஞானத்திற்குச் சாதனம் ஆன குருபதேசங்கேட்டல் முதலாய நான்கும் உடைய ஞான சாதகர் மிக மேலானவர். அவற்றுள் (நாலாவது) நிட்டையை முற்ற

மேவியவர்கள் வீட்டையடைந்திடுவார்கள். அந் நிலைக்கு முந்திய நிலையினோர் (நிட்டை கைவரப் பெற்றவர்) ஞானசித்தர். 1. ஞானநூலை ஓதல் 2. ஞானநூலை ஓதுவித்தல் இரண்டும் நூற் கேள்வியுள் அடங்கும். (சாத்திர சிரவணம்) 3. நற்பொருளைக் கேட்பித்தல் (4) (அப் பொருளைத்) தான் கேட்டல் (5) நன்று ஈனம் இலாப் பொருளதனைச் சிந்தித்தல் மூன்றும் நூற்பொருளைக் குறித்தவை. இம் மூன்றனுள் ளும் கேட்பித்தலும் கேட்டலும் நூற்பொருட் கேள்வி (சாத்திரார்த்த சிரவணம்). நூலோதல் செய்வுழிச் சாத்திர சிரவணமும் நூற்பொருட் கேள்வி சாத்திரார்த்த சிரவணமும் ஆகும். ஈனமிலாப் பொருளைச் சிந்தித்தல் ஞான சாத்திரார்த்த சிந்தனம். பலர் பயின்ற காரணத்தால், எளிதின் விளங்கும்பொருட்டு, வடசொற்றொடரால் எழுதினேம். தமிழ்ப் பற்று மிக்க அன்பர் வருந்தாதிருக்க. இத்துணையும் பதிபசு பாசந்தெரிக்கும் ஞான மும், ஞானசாத்திரமும், ஞானசாத்திரார்த்தமும் அவ்வர்ந்த ஞானமும் ஓரளவிற் சுருங்கக் கூறினேம். இதனை அருணந்தி தேவநாயனர் சுபக்கத்தில்

“ஞானநூ றனையோதல் ஓதுவித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல்
தான் கேட்டல் நன்று
ஈனமிலாப் பொருளதனைச்
சிந்தித்தல் ஐந்தும்
இறைவனடி யடைவிக்கும்
எழின்ஞான பூசை.”

(என்றருளினர். இஃது அபரஞான வழிபாடு. இது பரஞானத்தை அடைவிக்கும். இறைவ னடியை அடைவது (மும்மலமும் நீங்கிய) முத்தான்மா (எழுவாய்) அடைவிப்பது திருவடி ஞானம். (கருவி) அடையப்படும் பொருள் (செயப்படுபொருள்) 1. சிவஞானம் 2. ஆன்மா 3. சிவனடியை 4. அடைவிக்கும் என்னும் ஒரு வாக்கியத்தில், 1. எழுவாய் 2. அடையும் வினை முதல் (–எழுவாய்) 3. செயப்படு பொருள் 4. பயனிலை. 1.அடைவதாகிய எழுவாய். 2. அடைவிப்பதாகிய எழுவாய். 1. ஆன்மா 2. சிவஞானத்தால் 3. சிவனடியை 4. அடையும் என்னும் வாக்கியத்தில் முறையே 1. எழுவாய் 2. கருவி, 3. செயப்படுபொருள், 4. பயனிலை அமைந்துள்ளன. இவற்றுட் பயனிலையல்லாத மூன்றையும் முறையே 1. ஞாதா (ஞாதுரு) 2. ஞானம் 3. ஞேயம் என்றுணர்க. இம் மூன்றனுள்ளே (3) ஞேயம் இறைவனடி. (2) ஞானம் (ஞானபூஜை அபரஞானம்) (1) அடை யும் ஞாதா (முத்தான்மா).

இறைவடி வேறு. அதை அடைவது வேறு. அடைவிப்பது வேறு. அடைவிக்கும் ஞானத்தால் நாடுதலும்,ஞாதுரு ஞானஞேயப் பகுப்பை நாடாமையும், அத்திறத் தால் சிவனுடனும் பெற்றி தரும் ஞானப் பெருமையும் உணர்ந்தொழுகும் நிலையினர் சன்மார்க்கத்தார். இங்கு நினைக்கத்தக்கது ஒன்றுண்டு. சன்மார்க்கம் நன்னெறி ஞான நெறி என்பன ஒரு பொருளன என்பது அது. ஞானநெறியிற் சென்று அடையும் ஆன்மாவுக்கு அந்நெறியின் முடிவில் அந்த ஞானத்தால் அடையப்படும் பொருள் பின்மார்க்கச் சிவனுட னும் பெற்றி, சிவப்பேறு. ஞானப் பெருமை யுடையோர் என்றது சன்மார்க்கத்தார் என்ற படி. இது சாதன நிலையை உடையோர் என்று குறித்து நின்ற பெயர். ‘சிவனைப் பெறுவர்’ என்று சாத்தியம் அடைவர் என்னும் நிச்சயத்தைக் குறித்து நின்று, சாதனம் சாத்தியத்தைப் பயந்தே விடும் என்றது. அச் சாத்தியம் சிவப்பேறு. சிவத்தைப் பெறுவது கேட்டல், நினைத்தல், தெளிதல், நிற்றல் ஆய நான்காலும் படிப்படியாய் வளரும்.அவ்வளர்ச்சி யில் கேட்டலால் வளரும் ஞானமும் சிந்தித்த லால் வளரும் ஞானமும், தெளிதலைப் பயக்கும். தெளிந்த ஞானமே தெளிந்தவண்ணம் நிற்கச் செய்யும். அத்தெளிவுடன் நிற்பினும், நினை வுடன் நிற்பினும், கேள்வியுடன் நிற்பினும் வீடுறுதல் இல்லை. அஃதாவது பரமசித்தாந்த முத்தி இல்லை என்றபடி. மேலாயபதமுத்தி களே எய்தும். சரியை கிரியை யோகம் மூன்றாலும் எய்தும் பதமுத்தி களினும் மேலாய பதமுத்திகள். இம்மேலாய பதமுத்தி நிலை களுள் எய்தினோர், சிவனருளால் இந்த உலகில் நற்குலத்திற் போந்து திருவவதாரம் பண்ணு வர். பிறவார் குருதரிசனம் எய்திக்குருபதேசத் தால் நேரே திருவடி ஞானத்தைப் பெற்று ஞான நிட்டை அடைந்து சிவனடி சேர்வர். ஞானநெறியை அடையாமலே நேரே ஞான நிட்டையை மேவும் மேன்மையர் இவர்.

ஞானநெறிக்கும் ஞானநிட்டைக்கும் வேறு பாடு உணராதும் உணர்ந்து உணர்த்தாதும் ஓர் உரை இருப்பின் அது மெய்யுரை ஆமோ? அவ்விரண்டனையும் ஒன்றாகவே கொண் டுரைத்தது எங்கனம்உரையாகும்? இருமொழிக் கடலும் நிலைகண்டுணர்ந்ததற்கு இதுவோ சான்று?

வழிபாடு, வேள்வி ஐவகைப்படும். 1. கன்ம வேள்வி, 2. தவவேள்வி, 3. செபவேள்வி, 4. தியானவேள்வி, 5. ஞானவேள்வி எனப்படும் அவை. அவற்றுள் ஒன்றனின் ஒன்று உயர்ந்தது. உயர்வுட் குறைந்தது கன்மம். முடிந்த உயர்வுடையது ஞானம். உயர்வும் இழிவும் உடையன இடையன: தியானம் ஞானத்தை நோக்க இழிந்தது. செபத்தை

நோக்க உயர்ந்தது. அப்படியே செபமும் தவமும் உயர்வு இழிவுகள். ஆன்மா பரஞானத்தையும் அதனுல் திருவடியையும் அடையும் சாதனத்தின் எளிமை அருமை, சிறுமை பெருமைகளாலாவன. இறைவனடியும் இறைவனடி ஞானமும் நிலையால் வேறுபட்டவை. 'இறைவனடி அடைவிக்கும் எழின் ஞானபூசை' என்றதில் 'இறைவனடி' எனப்படும் சாத்தியம் கூறப்பட்டது. 'இறைவனடி ஞானமே ஞானம்' என்று அந்தச் சாத்தியத்தைப் பயக்கும் சாதனமாகிய (பரசிவனைக் காட்டும்) ஞானம் கூறப்பட்டது.

பரசிவனைக் காட்டும் ஞானம் எனவே, (1) காணமற் செய்யும் பாசத்தைப் போக்குதலும், (2) காணும் ஆன்மாத் தன்னையறிதலும் (3) உணர்விக்கும் சிவஞானம் தோன்றுதலும் தோன்றின. இவ்வுண்மையைத் திருவிடைமருதூர் மும்மணிக் கோவை (13)யுள் முற்றுந் துறந்த முழு முனிவர் பெருமகனுர் ஆய பட்டினத்து அடிகளார்,

"நின் தெய்வத் திருவருள் கைவந்து கிடைத்தலின்
மாயப் படலம் கீறித் தூய
ஞான நாட்டம் பெற்றபின் யானும்
நின்பெருந் தன்மையும் கண்டேன்; காண்டலும்
என்னையும் கண்டேன் பிறரையும் கண்டேன்
நின்னிலையனைத்தையும் கண்டேன் என்னே
நின்னைக் காணுமாந்தர்
தன்னையும் காணுத் தன்மை யோரே."

என்றருளியதாலும் அறியலாம்.

அகம்பிரமக்காரர் முதலாய பிறர் ஞானம் போலாது சைவ சித்தாந்தத்தில் கூறும் ஞானம் சன்மார்க்கம் எனப்பட்டது. படவே அவர்களுடைய கொள்கையிற்படும் ஞானம் பசுஞானமும் பாசஞானமும் ஆகும் என்றதாம். ஞானத்தால் நாடி என்றதால், இந்த ஞானே தயத்திலே ஞானம் ஞாதுருஞேயம் என்னும் திரிபுடி ஞானம் உண்டு. "பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர்" என்றதில் விளங்கும் பரசிவனைக் காட்டும் சன்மார்க்க ஞானமும் அதனுல் நாடிக் காணும் பயனுக் கிடைக்கப் பெறும் பரதரிசனமும் விகற்ப ஞானத்தாற் கிடைக்குமோ? பதார்த்தங்களைப் பார்க்க வரும் ஞானம் பலஞானம். அஞ்ஞான விகற்பம், வாசகவாச்சிய ஞானம் வைந்தவந்தின் கலக்கந்தரும் ஞானம் போக ஞாதுரு ஞானஞேயம் தங்கிய ஞானம் சங்கற்பனை ஞானமாகும்.

இவையெல்லாம் கடந்த சிவஞானமே திருஞானம். இத் திருஞான சம்பந்தமே காழி வேந்தர்க்கு உளதாய சம்பந்தம். இச் சம்பந்தமுடைய சீவன் முத்தர் சிவமே கண்டிருப்பர்.

சன்மார்க்கத்தில் பரசிவனைக் காட்டும் திருவடி ஞானத்தாற் காணும் நிலையில் ஞானஞேயமொடு ஞாதுருவும் கூடியவாறு நாடியபோது அம்மூன்றும் உண்மையின் பெத்தாவத்தையிற் போலத் திரிபுடியறிவு எனல் கூடாது. பெத்தாவத்தையில் பெயர், இனம், வினை, பண்பு, பொருள் ஐந்து விகற்பமும் உண்டு. இம் முத்தியில், பரசிவனைக் காட்டும் நன்மார்க்க ஞானத்திற்கும், ஞாதுருவுக்கும் ஞேயத்துக்கும் பெயர் சாதி குணம் கர்மம் பொருள் என்ற ஐந்து விகற்பமும் இல்லை. அதனுல் விகற்ப ஞானமும் அன்று.

'பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றி' என்றது வரை சாக்கிராதீதாவத்தையிலிருக்கும் நைட்டிகர் நிட்டை, பரஞானத்தால் நிகழும் சீவன் முத்தியவத்தை, 'சிவனைப் பெறுவர்' என்றது பரமுத்தி.

ஞானசாதர் நால்வர்:- 1. ஞானத்திற் சரியையோர். 2. ஞானத்திற் கிரியையோர் 3. ஞானத்தில் யோகியர் 4. ஞானத்தின் ஞானியர். ஞானசித்தர்; இந்நான்கு நிலையினும் மேலாய் முடிவாய் நிற்கும் நிட்டையின் முற்றியராய்ச் சிவமேயாயவர். இஞ்ஞான நிட்டையுடையோருக்கு நன்மை தீமை முதலிய துவந்துவங்களும் பிறவும் இல்லை. அத்திறத்தார்க்கு இல்லை எனப்பட்ட எல்லாம் தமக்கும் இல்லை என்று சொல்லியும் நடந்தும் வருவோர் நரகமே சுயார்ச்சித கிருகம். விடுகின்ற வீடும் பெறுகின்ற பேறும் இல்லை என்பது மட்டும் உறுதி.

ஞானத்தால் சிவஞானிகள் தொழுவார்கள். சிலஞானிகள் என்றல் பிழை.






## (3) கண்ணன்

தாலாட்டுப் பருவம்

உலகமாகிய தொட்டிலை ஆட்டுவிக்கும் பரம் பொருளான கண்ணன் ஆயர்பாடியில் யசோதை வீட்டுத் தொட்டிலில் உறங்குகிறான். யசோதையும் அருமையாகத் தாலாட்டுப் பாடல்களைப் பாடித் தாலாட்டுகிறாள். "மாணிக் குறளனாய் வாமனாவதாரம் பண்ணின கண்ணனே! நீ உலகமனைத்தையும் முன்பு அளந்தாயன்றோ! அப்படிப்பட்ட உனக்கு யாரால் தொட்டில் பண்ணிக் கொடுக்க முடியும்? உன் பெருமையை அறிந்து நான்முகக் கடவுளாகிய பிரமனே தொட்டிலைப் பண்ணிக் கொடுத்துள்ளான். அத்தொட்டிலோ மாற்று உயர்ந்த பொன்னால் செய்யப்பட்ட மாணிக்கத் தொட்டில்; நடுவில் வயிரக் கற்கள் பதிக்கப்பட்ட வண்ணத் தொட்டில். அத்தொட்டிலிலே நீ உறங்கனை வாராய்" என்று அழைக்கின்றாள்.

"கண்ணா! பிரமன் உனக்குத் தொட்டில் பரிசளித்திருக்கிறான் என்பதைக் கேள்வியுற்ற விடையேறு காபாலியாகிய சிவபெருமான், தானும் ஏதாகிலும் உனக்குக் கொடுக்க வேண்டுமென்று விரும்பினான். உன் இடுப்பில் அணிய, அழகிய பொன்மணிச் சரத்தையும், சுரிகையாகிய உடைவாளையும், மாதளம்பூக் கோவையான அரைவடத்தையும் அன்பாக அனுப்பியுள்ளான். நீ அவைகளையெல்லாம்

கா. அ. மணவாளன், எம்.ஏ., பிஎச்.டி.

அணிந்து கொண்டு அழாமல், கண் உறங்குவாயாக" என்று யசோதை கூறித் தாலாட்டுகிறாள். பாட்டைப் பார்ப்போம்:

'மாணிக்கங்கட்டி வயிரமிடைகட்டி
ஆணிப்பொன்னாற் செய்த வண்ணச்
சிறுத்தொட்டில்
பேணி உனக்குப் பிரமன் விடுதந்தான்
மாணிக்குறளனே தாலேலோ! வைய
மளந்தானே தாலேலோ!
உடையார் கனமணியோடு
ஒண் மாதளம்பூ
இடைவிரவிக் கோத்த எழில் தெழ்கினோடு
விடையேறு காபாலி யீசன் விடுதந்தான்
உடையாய் அழேல் அழேல் தாலேலோ
உலகமளந்தானே தாலேலோ.

இவ்விதம் பிரம்மாவும், சிவனும் கண்ணனுக்குப் பரிசனுப்பி மகிழ்ந்தார்கள் என்று போற்றுகிறார் பெரியாழ்வார். இவர்கள் மட்டுமா? இன்னும் இந்திரனும், மற்ற தேவர்களும் கண்ணனுக்குப் பரிசனுப்பினார்களாம். "இந்திரன் தானும் எழிலுடைக் கிண்கிணி தந்து உவனாய் நின்றான்" என்றும் "சேவடிக் கிண்கிணியும், அங்கைச் சரிவளையும் நாணு மரைத் தொடரும், அமரர்கள் போத்தந்தார்" என்றும் அழகிய வரிகளிலே ஆழ்வாரிசைத்துப் பாடியவை படித்து இன்புறத்தக்கவையாம்.

மேலும் குபேரன், வருணன் போன்ற ஏனைய தேவர்களும், பூமிப்பிராட்டியும், துர்க்கையுமாகிய அன்னைமார்களும்கூட அருமையான

பொருள்களைக் கொண்டு வந்து கண்ணனுக்கு வழங்கினர்களாம். அப்பொருள்களையெல்லாம் அணிந்து கொண்டு அழகாகத் தொட்டிலில் உறங்க வேண்டுமென்று யசோதை பிரார்த்திப் பதுபோலே ஆழ்வார் தாலாட்டுப் பாடல்களைப் பாடியுள்ளார்.

அம்புலிப் பருவம்

அன்ருெரு நாள் மாலை யசோதை கண்ணனை இடுப்பிலே வைத்துக்கொண்டு தெரு வாசலுக்கு வந்தாள். வெட்டவெளியில் வான வீதியில் பூரண சந்திரன் பொலிவோடு செல்கிருன். அம்முழுநிலவைக் கண்ட கண்ணன், தன் பிஞ்சு விரல்களாலே அச்சந்திரனைச் சுட்டிக் காட்டி அழைக்கின்ருன். அதைக் கண்ட யசோதை சந்திரனை விளித்துக் கூறுகிருள். "சந்திரனே! தன் முகத்திலே கட்டப் கட்ட சுட்டியென்னும் ஆபரணம் அசைய, காலிலே கட்டியுள்ள சதங்கைகள் ஒலிக்க, புழுதியாடிய கண்ணன் உன்னை அழைக்கின் ருன். உலகில் கோடிக்கணக்கான மக்கள் கண்ணனை-என் மகன் கோவிந்தனைக் காண விரும்பும் பொழுது, அவன், சந்திரனே! உன்னைக் காண ஆசைப்படுகிருன். எனக்கு இன்னமுதமாய் விளங்குகிற கண்ணன் உன்னைப் பலகாலும் காட்டிக் காட்டி அழைக் கின்ருன். கரிய நிறமுடைய என் கண்ணனேடு அம்புலியே நீ ஆடவாராய்! மேகத்தில் மறைந்து ஒளிக்காமல் நீ உடனே வருவாயாக" என்று விளிக்கிருள் யசோதை.

அவள் மேலும் கூறுகிருள். "சந்திரா! நீ இப்போது நாள்தோறும் தேய்வதும் வளர்வதுமாயிருக்கிருய்! களகமுடையவனுயுமிருக் கிருய்! நீ இப்படி மாறிமாறிக் கஷ்டப்படாமல் எப்பொழுதும் தேய்வின்றி ஒரே நிலையில் பரிபூரணமான அழகைப் பெற்றுக் களங்கமின்றி விளங்கினலும் என் குழந்தையாகிய கண்ணனுடைய முகத்திற்கு ஒப்பாகமாட்டாய். ஆகையால் நாமே அழகிற் சிறந்துள்ளோம் என்கிற செருக்கையொழித்து, உன்னைக்காட்டிலும் மிக அழகிய முக மண்டலத்தையுடையவனுன இக் கண்ணன், உன்னைச் சுட்டிக் கைகளால் அழைப்பதை, நீ பெரிய பாக்கியம் என்று கருதி விரைந்து ஓடி வருவாயாக" என்று கூறுகிருள்.

"அப்படி இவன் அழைக்கவும் நீ வாராவிட்டால் வெகு காலமாக உன்னை அழைக்கிற இக் குழந்தைக்குக் கைநோகும். அதனுல் நாளும் இளைத்துத் தேய்ந்து வரும் உனக்கு, மேலும் பல கெடுதல்கள் உண்டாகும். ஆகவே விரைந்து ஓடிவா" என்று யசோதை சந்திரனைக் கூவி அழைக்கிருளாம். பாட்டை வரிசையாகப் பார்ப்போம்:

தன் முகத்துச்சுட்டி தூங்கத் தூங்கத்
 தவழ்ந்துபோய்
பொன்முகக் கிண்கிணியார்ப்பப்
 புழுதியளைகின்ருன்
என்மகன் கோவிந்தன் கூத்தினை
 யிளமாமதீ
நின்முகங் கண்ணுளவாகில்
 நீயிங்கே நோக்கிப்போ.

என்சிறுக்குட்டன் எனக்கோ
 ரின்னமுதெம்பிரான்
தன் சிறுக்கைகளால் காட்டிக்
 காட்டியழைக்கின்ருன்
அஞ்சன வண்ணனேடு
 ஆடலாடவுறுதியேல்
மஞ்சில் மறையாதே மாமதீ
 மகிழ்ந்தோடிவா!

சுற்றுமொளி வட்டம் சூழ்ந்து
 சோதி பரந்தெங்கும்
எத்தனை செய்யினும் என்மகன்
 முகம் நேரொவ்வாய்
வித்தகன் வேங்கடவாணன்
 உன்னை விளிக்கின்ற
கைத்தலம் நோவாமே
 அம்புலீ கடிதோடிவா.

மேலும் யசோசை கூறுகிருள்:

"சந்திரா! உன்னைக் கூவியழைக்கின்ற இக் குழந்தையின் இனிய மழலைச்சொல் உன் காதுகளில் விழவில்லையா? செவிடனே நீ! உன் காதில் துளையில்லையோ! இக்குழந்தைக் கண்ணன், இனிமையான முற்ருத மழலைச் சொல்லினல் உன்னை அழைக்கவும் நீ காது கேளாதாரைப்போலே போய்விட்டாயேயானல் நீ காது பெற்றது பயனற்றதாகுமன்ரே!

இவனுடைய இளஞ்சொல்லைக் கேட்டு நீ ஓடி வருதலே செவி பெற்றதற்குப் பயனாகும் என்பதை நீ உணர்வாயாக" என்கிறாள்.

அழகிய வாயில் அமுதவூறல் தெளிவுரு
மழலை முற்றாத இளஞ்சொல்லா லுன்னைக்
[கூவுகின்றான்
குழகன் சீர்தான் கூவக்கூவ நீபோதியேல்
புழையில வாகாதே நின்செவி புகர்மாமதீ!

என்பதே அப்பாட்டு.

இப்படிப் பலகால் கூவி அழைத்தும், ஓடி வராத சந்திரனைக் கண்ட யசோதைக்குக் கோபம்வந்துவிட்டது. "சந்திரனே! என் மகன் உன்னை ஓயாமல் கூவி அழைத்தாலும் வரமாட்டேன் என்று ஆகாயத்திலேயே நிற்கிறாய். இவன் சிறு பிள்ளைதானே! இவன் கூப்பிட்டு நாம் போக வேண்டுமா? என்று நீ அலட்சியமாக நினைக்கிறாய் போலும்! இவனைச் சிறியவன் என்று நீ குறைவாக நினையாதே. இவன் முன்பொருகாலத்தில் இவ்வுலகங்களையெல்லாம் உண்டு உமிழ்ந்தவன். பெருமாயங்களைச் செய்ய வல்லவனான இவனை நீ, அவமதித்தால் இவன் உன்மேல் பாய்ந்து உன்னைப் பிடித்துக் கொள்வான்'' என்று அச்சுறுத்துகிறாள்.

மேலும் அவள் கூறுகிறாள் ''இவன் சிறுவன் தானே! இவனால் என்ன செய்துவிட முடியும் என்று இகழாதே. இவன் இளம் சிங்கம் போன்றவன். உண்மையில் இவனைப் பற்றி நீ சரியாக அறிய வேண்டுமானால் மகாபலிச் சக்கரவர்த்தியிடம் சென்று கேள். இச்சிறுவனின் பெருமையை, அவன் அனுபவத்தில் உணர்ந்தவன். இவனுடைய பால்யகால நிகழ்ச்சியை நினைத்தால் மகாபலிச்சக்ரவர்த்தி இப்பொழுதும் நடுங்கி போவான். சந்திரனே! என் குழந்தையாகிய கண்ணனை இவ்வூரிலுள்ள பிள்ளைகளைப் போலே இவனும் ஒருவன் என்றும், சிறியவன் என்றும் இகழ்ச்சியாக நினையாதே. மகாபலியின் கொழுப்பை அடக்கின இவனிடத்தில் அபசாரப்படாமல் உடனே விரைந்து வருவாயாக" என்று கூறுகிறாள்.

பாலகனென்று பரிபவஞ்
செய்யேல் பண்டொருநாள்
ஆலினிலை வளர்ந்த
சிறுக்கன வனிவன்
மேலெழப் பாய்ந்து பிடித்துக்
கொள்ளும் வெகுளுமேல்
மாலைமதியாதே மாமதீ
மகிழ்ந்தோடி வா.

சிறியன் என்று என்னிளஞ்
சிங்கத்தை இகழேல் கண்டாய்
சிறுமையின் வார்த்தையை
மாவலியிடைச் சென்றுகேள்
சிறுமைப் பிழைகொள்ளில்
நீயுமுன் தேவைக்குரிய காண்
நிறைமதீ நெடுமால்
விரைந்துன்னைக் கூவுகின்றான்

செங்கீரைப் பருவம்

(குழந்தை தனது இரண்டு கைகளையும் முழந்தாளையும் ஊன்றித் தலையை நிமிர்த்துக் கொண்டு ஆடுதலாகிய கூத்து செங்கீரையாகும்) யசோதை இப்படிப்பட்ட விளையாட்டைக் காணவிரும்பினாள். "எனக்கொருகால் ஆடுக செங்கீரை ஆடுக ஆடுக" என்று கண்ணனிடம் வேண்டி அனுபவித்தது போலவே பெரியாழ்வாரும் அனுபவித்துப் பேசி மகிழ்கிறார்.

எல்லா உயிரினங்களும் இவ்வுலகில் வாழ்ச்சி பெற்று உய்ய வேண்டுமென்ற பெருங் கருணையினால் இவ்வுலகைப் படைத்த பரமனான கண்ணன், இவ்வுலகுக்கு அழிவு நேர்ந்த பொழுது தன் வயிற்றுக்குள்ளே அவ்வுலகத்தை வைத்துக் காப்பாற்றிப் பின்பு வெளிப்படுத்தினான் என்கின்ற வரலாற்றிலும், அவன் பச்சை ஆலிலையில் துயின்ற பாங்கிலும் ஈடுபட்ட யசோதை கண்ணனைத் தனக்காக ஒருகால் செங்கீரை ஆடவேண்டுமென்று பிரார்த்திக்கிறாள். அப்படி ஆடும்போது அவன் திருமார்பிலே வசிக்கும்படியான பிராட்டிக்கு (லக்ஷ்மிக்கு) ஒரு குறையும் நேராவண்ணம் ஆடவேண்டுமென்று சொல்கிறாள். அதோடு தாமரை மலர் போன்ற கண்களையும், மை போன்று கருத்த திருமேனியையுடைய கண்ணனே! உன் செல்வக் கோலத்துக்கு ஏற்ப காதில் பொலியும் மகரக் குழைகளசையவும் எனக்காக ஒருமுறை செங்கீரை ஆடி அருள வேண்டுமென்றும் கேட்கிறாள்.

உய்யவுலகு படைத்துண்ட மணிவயிரு
ஊழிதோறூழி பல வாலினிலையதன்மேல்
பையவுயோகு துயில் கொண்ட பரம்பரனே
பங்கய நீணயனத் தஞ்சனமேனியனே
செய்யவள் நின்கைலஞ்சேமமெனக் கருதிச்
செல்வு பொலிமகரக்காது திகழ்ந்திலக
ஐயவெனக் கொருகால் ஆடுக செங்கீரை
ஆயர்கள் போரேறே ஆடுக, ஆடுகவே.

இதனால் செங்கீரையாடும்போது திருமார் பிலுறையும் பிராட்டியாகிய ஸ்ரீமஹாலக்ஷிமிக்கு ஒரு அசைதலும், அதிர்ச்சியுமுண்டாகாதபடி ஆடவேண்டுமென்று யசோதை பிரார்த்திப்ப தாக ஆழ்வார் பாடியுள்ளார் என்று தெரி கின்றது.

கண்ணன் நெய், பால், தயிர் முதலியவற்றை மிகுதியாக உண்பவனன்றோ! அதோடு உண்ட பின்பு சந்தனம் சண்பகம் என்ற வாசனைப் பொருள்களைத் தன் உடம்பிலே பூசியும் சூடியும் களிப்பவனன்றோ! ஆதலால் இக்கண்ணன் செங்கீரையாடும்பொழுது நல்ல மணம் எங்கும் சூழ்ந்து வீசும். அவன் ஆடுகின்றபொழுது சிறிது வாயைத் திறந்தால் 'கருப்பூரம் நாறு மோ, கமலப்பூ நாறுமோ? திருப்பவளச் செவ் வாய்தான் தித்தித்திருக்குமோ'' என்று இயற்கையாகவே அவன் வாயிலிருந்து தாமரைப் பூ பச்சை கற்பூரங்களின் பரிமளமும் வீசும். வாயினுள்ளே வெள்ளி அரும்பு போன்ற சில பற்களும் பிரகாசிக்கும். திருமார் பில் அணிந்துள்ள அழகிய ஆபரணங்களின் மேல்வாயில் ஊறுகின்ற அமிருதமயமான தண் ணீரும் இற்று இற்று வீழும். இப்படிப்பட்ட நிலைமைகளுடனே வேதத்தினுடைய உண்மைப் பொருளாக விளங்கும் கண்ணனை நீ எனக்காக ஒருகால் செங்கீரையாடியருள வேண்டும் என்று பிரார்த்திக்கிருள்.

பாலொடு நெய் தயிர் ஒண் சாந்தொடு
சண்பகமும்
பங்கயம் நல்ல கருப்பூரமுநாறிவர
கோலநறும்பவளச் செந்துவர்வாயினிடைக்
கோமளவெள்ளி முளைப்போல்சில
பல்லிலக
நீலநிறத்தழகானரம் படையின் நடுவே
நின்கனிவாய முதமிற்று முறிந்துவிழ
ஏலுமறைப் பொருளேயாடு செங்கீரை
ஏழுலகமுடையாய் ஆடுக ஆடுகவே.

கண்ணன் திருவடிகள் செந்தாமரைப் பூப்போல் சிவந்து மென்மையாய் அழகாக இருக்கிறதாம். அத்திருவடிகளிலுள்ள விரல் கள் அத்தாமரை மலரின் உள்ளிதழ் போல் விளங்குகின்றன என்கிருர். காலிலே சதங்கை அணிந்துள்ளான். கை விரல்களிலே, மோதிரம் அணிந்துள்ளான். அரையில் பொன் அரை நாணும், மாதுளம்பூ கோவையும் பொன் மணிகளோடு கலந்து அணிந்து கொண்டிருக்கிருன். மேலும் சிறுபவள வடமும், மங்கல ஐம்படைத்தாலியும், திருத்தோள் வளையங்களையும், காதணிகளையும், மகாகுண்டலங்களையும் அணிந்து கொண்டு சிறப்பாக விளங்கும் கண்ணன் திருமுகத்தில் சுட்டியென்னும் ஆபரணமும் அசைந்து ஆடிக் கொண்டிருக்கிறதாம். இப்படிப்பட்ட திவ்விய ஆபரணங்களையெல்லாம் அணிந்து கொண் டிருக்கும் கண்ணன் செங்கீரை யாடும் பொழுது அவைகள் ஆடவும், காண்பார்க்கு மிகவும் கண் கொள்ளாக் காட்சியாக விளங்குமன்றோ! அத்தகைய ஆட்டத்தைக் காண ஆசைப்பட்ட யசோதைப் பிராட்டிபோலே பெரியாழ்வாரும் தாயான நிலையில் இப்பாசுரத்தைப் பாடியுள்ளார்.

செங்கமலக் கழலில் சிற்றிதழ் போல் விரலில்
சேர்திகழாழிகளு் கிண்கிணியும்
— அரையில்
தங்கிய பொன் வடமுப் தாள நன்
மாதுளையின்
பூவொடு பொன்மணியும் மோதிரமும்
கிறியும்
மங்கல ஐம்படையும் தோள்வளையும்
குழையும்
மகரமும் வாளிகளும் சுட்டியு மொத்திலக
எங்கள் குடிக்கரசேயாடுக செங்கீரை
ஏழுலகமுடையாய் ஆடுக ஆடுகவே!

(தொடரும்)

# திருமுறை அறிமுகம் (2)

முறையென்பது பலபொருள் உணர்த்துமொரு செந்தமிழ்ச் சொல்லாகும். பிங்கலந்தை என்னும் நிகண்டு நூல் இச் சொற்பொருளை விளக்குங்கால், 'கோசமும் பழமையும் ஊழும் கூட்டும், ஆர்ப்பும் முறைமையும் முறையெனலாகும்' என்று கூறுகின்றது. இதன்படி நூல், பழமை, ஊழ், கூட்டு, கட்டு, முறைமைஎன்னும் இவ்வாறும் முறையென்னும் சொற்குப் பொருளாகும். காலப்போக்கில் தோன்றிய இச்சொற்பொருள் வளர்ச்சி காரணமாக இதற்கு மேலும் பல பொருள்கள் தோன்றலாயின. சைவத் திருமுறைகளின் மாட்சியில் ஈடுபட்ட சான்றோர்கள், முறையென்னும் சொல்லுக் கமைந்த பல்வேறு பொருள்களும் சைவத் திருமுறைகட்குப் பொருந்துவனவாக உள்ளன எனக் கூறி, அவற்றைப் பொருத்திக் காட்டி விளக்கியுமுள்ளனர். அப் பல் பொருட்பொருத்தம் எவ்வாறாயினும் முறையென்னுஞ் சொல் நூலைக் குறிக்கின்றது. என்பதில் ஐயமின்று. நூல் என்னும் பொருளில் 'பாடும் திருமுறை பார்ப்பதி பாதங்கள் சூடுமின் சென்னி' எனத் திருமந்திரம் இச்சொல்லை ஆண்டுள்ளது. கச்சியப்ப சுவாமிகள் தம் புராணத் தொடக்கத்தில் அவையடக்கங் கூறுமிடத்து, இச்சொல்லை நூல் என்னும் கருத்தில்,

> 'இறை நிலம் எழுதுமுன் இளைய பாலகன்
> முறை வரைவேன் என முயல்வ
> தொக்குமால்'

எனப் பயன்படுத்தியுள்ளார். 'முக்காற் கேட்பின் முறையறிந்துரைக்கும்' என்னும் நன்னூற் பொதுப் பாயிரப் பகுதியிலும் முறையென்னும் சொல் நூலைக் குறிப்பதாகவே அமைந்துள்ளது. திருமுறைகள் என்னும் பன்மை வழக்கு, இச்சொற்கு இவ்விடத்தில் நூல் என்னும் பொருளே பெரிதும் பொருத்தமாகும் என்பதனைக் காட்டி நிற்கின்றது.

திரு என்பதும் பலபொருள் உணர்த்துமொரு செந்தமிழ்ச் சொல்லாகும். உலகியற் றலைவனுக்கும் தலைவிக்கும் தொல்காப்பியம் கூறும் பத்துவகை ஒப்பினுள் ஒன்றான திரு என்பதனை விளக்க வந்த பேராசிரியர், "திருவென்பது பொருளுடைமையும் பொருள் கொணர்ந்து துய்த்தலுமின்றி எஞ்ஞான்றும் திருத்தக விற்றாயதோர் உள்ள நிகழ்ச்சி" என்று கூறுகின்றார். பேராசிரியருடைய இக் கருத்தினை, 'இன்பத்தையும் துன்பத்தையும் விரும்புதல் விரும்பாமை இன்றி ஒப்ப நோக்கும் மனநிலை' என்று அறிஞர் விளக்கியுள்ளனர். கேட்டினை வேண்டாமையும், ஆக்கத்தை விரும்புதலும் மக்களிடத்தில் காணும் பொதுவியல்பாகும். இதற்கு மாறாக, விருப்பு வெறுப்பற்ற தன்மை இயல்பாகவே அமைந்து விளங்குவது இறையியல்பாகும். இதனால் இறையியல்பு கூறி வாழ்த்துரைக்க வந்த திருவள்ளுவர் இறைவனை 'வேண்டுதல் வேண்டாமை இலான்' என்று குறிப்பிட்டுள்ளார். வேண்டுதல் வேண்டாமை அற்ற தன்மையே 'திரு'வாகும். அத்திருவினை இயல்பாக உடையவன் திருவாளன் எனப்படுவான். இறைவன் திருநீற்றைத் திலகவதியார் திருநாவுக்கரசருக்கு வழங்கினார் எனக் கூறுமிடத்துச் சேக்கிழார் 'திருவாளன் திருநீறு திலகவதியார் அளிப்ப' என்று கூறுகின்றார். மேலும் இந்த இயல்பினைத் திருவருள் வலத்தால் எய்திய சான்றோர்களைக் 'கேடும் ஆக்கமும் கெட்ட திருவினர்' என்று கூறுகின்றார். இவ்வருளாளர்கள் திருநின்ற செம்மையைச்-சிவத்தைச் சார்ந்தவர்கள் ஆவர். இதனால் திருநாவுக்கரசரைத் 'திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக்கரையன்' எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் போற்றுகின்றார். சம்பந்தர் முதலிய ஏனைய சமய குரவர்களும் இவ்வாறு திருநின்ற செம்மையே செம்மையாக்கொண்ட பெருமக்களேயாவர். அவனருளாலே அவன்றாள்

டாக்டர். அ.மா. பரிமணம், எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.

வணங்கும் தகுதிபெற்று அவனையே பாடிப் பரவியவர்கள் இப்பெருமக்கள். இவர்கள் உலகியல் வட்டத்தில் நின்று இறைவனைப் பாடிய புலவர்கள் போலன்றி இறைவட்டத்தில் நின்று இறைவனைப் பாடிய ஏற்றமுடையவர் கள். இவர்தம் பாடல்கள் அருளாரமுதப் பெருவிருந்தாகும். பயில்வோரைப் பக்தி வெள்ளத்து ஆழ்த்திப் பரமனருள் சேர்க்கும் பான்மையின. இதனாலேயே திருநாவுக்கரசரை 'வீட்டுக்கு வாயில் தொடைசாத்து சொல் வேந்து' என்றும், சம்பந்தரை, 'ஆறதேறும் சென்னியான் அருள்மேவ அவனியர்க்கு வீறதேறும் தமிழால் வழி கண்டவன்' என்றும் பாராட்டுவர். இவ்வழியிலமைந்த அருட்சான்றோர்களின் பாடல்களையே சைவ உலகு திருமுறைகள் எனத் தொகுத்துப் போற்றுகின்றது. எனவே திருமுறை என்பது அருட்கடலாய்த் திகழும் இறைவன் அருளில் திளைத்த சான்றோர்கள் அவ்வனுபவத்தை மற்றவர்களும் பெறுவதற்கு வாய்ப்பாகப் பாடி யருளிய நூல் எனப் பொருள்படும். வைதிக நெறியினர்க்குத் திருமறைகள் (நால்வேதங் கள்) போலச் சைவ சித்தாந்தச் செந்நெறி யினர்க்குத் திருமுறைகள் இன்றியமை யாதனவாகும்.

தமிழகத்தில் பக்தி இயக்கத்தைத் தோற்று வித்துச் சைவ மறுமலர்ச்சியின் முன்னோடி களாகத் திகழ்ந்த அப்பருக்கும் சம்பந்தருக்கும் முன்னும், பின்னும் வாழ்ந்த அருட்புலவர் களால் பாடப்பட்ட அருட்செல்வங்களை வகைப் படுத்தித் தொகுத்துப் பன்னிரு திருமுறை களாகச் சைவவுலகு பயன்பெற்று வருகின்றது. திருமுறைப் புலவர்கள் உலகில் மக்களொடு மக்களாய் வாழ்ந்தவர்களாயினும், இறை வட்டத்துள் நின்று இறையனுபவத்தில் திளைத்துப் பாடியவராவர். நின்மல நிலையில், சித்தம் சிவமாகப்பெற்றுப் பாடியவர்கள். திரு முறைகளில் ஒன்றாய்த்திகழும் மாணிக்கவாசகர் தம் திருவாசகத்திற்குப் பொருள் யாதென வினவியபோது தில்லையம்பலக் கூத்தன் திரு வடிவினைச் சுட்டி அதுவே பொருளெனக் காட்டி மறைந்ததாக வரலாறு கூறுகின்றது. அங்ஙனமே திருமுறைகளிலுள்ள ஏனைய அருளாளர் பாடல்களுக்கும் பொருள் இறைவனே யாவான் என்று கொள்ளுதல் வேண்டும். திருமுறைகளை விளக்கவந்த சபாபதி நாவலரவர்கள், 'இவையனைத்தும் திரோ தானம் நீங்கிய அருள்நாத ஒலியும், ஏனைய புலவர்தம் நூல்கள் மாயா நாதஒலியும் ஆகும்' என்று கூறுகின்றார். 'ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே' என்று அப்பரடிகள் கூறியவாறு அருள்நாத வடிவாயிலங்கும் இறைவனை வரிவடிவில் அமைத்துக்காட்டியுள்ள சட்டகமே திருமுறைகளாகும். அதனால் திருமுறைப் பாடல்கள் இறைவனை வழிபடும் கருவியாக அமைதலேயன்றி, இறைவனாகவே கருதி வழிபடப்பெறும் தகுதிபெற்றனவுமாகும். காலப் போக்கில் திருக்கோயில்களில் ஓரிடத்துத் திருமுறைகளை அடுக்கிவைத்துத் திருமுறைக் கோயில் என்னும் அமைப்பில் சைவப் பெரு மக்கள் வழிபடும் முறை தோன்றியது.

சைவப் பெருமக்கள் திருவருள் ஞானக் கருவூலமாகப் போற்றும் அருளாளர்தம் பாடல்களைப் பன்னிரண்டு திருமுறைகளாகப் பகுத்துள்ளனர். முதன் முதலாகத் திருமுறை களைத் தொகுத்தபோது அவை இன்றுள்ளன போலப் பன்னிரண்டாகப் பகுக்கப்படவில்லை. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தர மூர்த்திசுவாமிகள் ஆகிய மூவர் முதலிகளின் திருப்பாடல்களே முதன்முதலில் ஏழு திரு முறைகளாக அமைக்கப்பட்டன. அவற்றை அடங்கன் முறை என்றும் கூறுவர். அந்நிலை யில் மூவர் பாடல்களும் தேவாரம் என்னும் பொதுப்பெயரால் வழங்கும் வழக்கும் ஏற் பட்டது. காலப்போக்கில் மணிவாசகர் முதலிய ஏனை அருளாளர்தம் செய்யுட்களும் திருமுறை களாக வகுக்கப்பட்டு அவற்றின் எண்ணிக்கை வளர்ச்சியுற்றது. சேக்கிழார் பெருமான் அருளிய பெரியபுராணத்தை இறுதித் திரு முறையாக—பன்னிரண்டாந் திருமுறையாகச் சேர்த்து இப்போது அறியப்படும் 'பன்னிரு திருமுறை' என்னும் அமைப்புநிலை உருவாக் கப்பட்டது. இப்போதுள்ள பன்னிரு திரு முறை அமைப்பிற்கு மேலும் சில சைவப் புலவர்களின் பாடல்களைத் தொகுத்து, திரு முறை எண்ணிக்கையைப் பெருக்கவேண்டும் என நினைப்பவர் சிலர் இருந்தாலும், அதனைச் சைவஉலகம் ஏற்க மறுத்துப் பன்னிரண்டு என்னும் தொகையினையே முடிவாக ஏற்றுப் போற்றி வருகின்றது.

சேக்கிழார் சுவாமிகளின் பெரியபுராண அரங்கேற்றத்திற்குப் பின்னரே சைவத் திருமுறை பன்னிரண்டு என்னும் தொகை எண் பெற்றிருத்தல் வேண்டும். சேக்கிழார் காலத்தில் திருமுறையென்பது முதல் ஏழு திருமுறைகளையே பெரும்பாலும் குறித்ததாதல் வேண்டும். கணநாத நாயனர் வரலாறு கூறுங்கால் அவர் திருமுறையினை எழுதுவோர் வாசிப்போருக்குப் பயிற்சி அளித்து வந்தார் எனக் கூறும் குறிப்பில் 'திருமுறை எழுதுவோர் வாசிப்போர்' எனச் சேக்கிழார் கூறுகின்ருர். இங்குத் திருமுறை என்பது பன்னிரண்டாம் திருமுறையினை நீக்கி எஞ்சியவற்றையே குறிக்கின்றது தெளிவாகும். எட்டு முதல் பதினென்று வரை உள்ள திருமுறைகள் தொகுக்கப்பட்ட காலம் தெளிவுபடாமையால், சேக்கிழார் குறிப்பிடும் திருமுறை முதல் ஏழு திருமுறைகளையே—அடங்கல் முறையினையே சுட்டும் என்று கொள்வதில் தவறில்லை. பட்டினத்தார் பனுவல்கள் சில பதினேராந் திருமுறையில் இடம் பெற்றிருப்பதை நோக்குங்கால் பன்னிரு திருமுறை என்னும் வழக்கு அவர் காலத்திற்குப் பின்னரே தோன்றியிருத்தல் வேண்டும் என்று கருதலாம் ஏனெனில் சேக்கிழாருக்கு முன்னரே பதினெரு திருமுறைகள் தொகுக்கப்பட்டிருந்தால், பன்னிராண்டாந் திருமுறைக்குப் பின் தோன்றிய பட்டினத்தார் பனுவல்களை, ஏற்கனவே தொகுக்கப்பட்ட பதினேராந் திருமுறையில் புகுத்திக் கொண்டனர் என்று கருதுவது பொருத்தமாகாது. கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியார் செய்ததாகக் கருதப்படும் சேக்கிழார் புராணத்தில் பன்னிரு திருமுறை அடைவு பின்வருமாறு குறிக்கப்பட்டுள்ளது.

'மூவ ரோதுதிரு முறைக ளேழுதிரு
வாத வூரர்முறை ஒன்றிசைப்
பாவ ரைந்த முறை ஒன்று
மூலர்முறை ஒன்று பாசுரம தாதியா
கோவை செய்த முறை ஒன்று
சேவையர் குலாதி நீதிமுறை ஒன்றுடன்
பாவை பாகர்திரு வருள்சி றந்த முறை
பன்னி ரண்டென வகுத்தபின்.'

திருவள்ளுவர் தம் உலகப் பொது அறநூலைத் தமிழ் நெடுங்கணக்கின் முறையில் 'அகர முதல எழுத்தெல்லாம்' என அகரத்தில் தொடங்கி கூடி, முயங்கப் பெறின்' என னகரத்தில் முடித்திருப்பதாக ஒரு சிறப்புக் கூறுவதுண்டு. பன்னிரு திருமுறைக்கும் இதனை ஒத்த ஒரு சிறப்பு அமைந்திருப்பதனைக் கண்டு காட்டியுள்ளனர். முதல் திருமுறையின் முதற்பாடல் ஞானசம்பந்தர் திருவாய் மலர்ந்த 'தோடுடைய செவியன்' என்னும் பாசுரமாகும். பன்னிரண்டாந் திருமுறையின் இறுதிப் பாடல் 'மன்றுளார் அடியாரவர் வான்புகழ், நின்றதெங்கும் நிலவி உலகெலாம்' என முடியும் சேக்கிழார் திருப்பாடலாகும். முதல் திருமுறையின் தொடக்கத்திலுள்ள 'தோடு' என்னுஞ் சொல்லின் முதல் எழுத்திலுள்ள 'ஓ'வும் (த்+ஓ), உலககெலாம் என்பதன் ஈற்றிலுள்ள மகரமும் சேர்ந்து 'ஓம்' என்று அமைந்துள்ளதாகப் பன்னிரு திருமுறைக்கு ஒரு சிறப்புக் கூறுவதுண்டு. நம சிவய முதலான இறை நாம மந்திரங்கள் அனைத்தும் அடங்கிய சமட்டி நிலைாக ஓம் என்னும் பிரணவத்தைக் கூறுவதுண்டு. ஆதியும் அந்தமும் இயைந்து ஓமென முடிந்து கிடக்கும் இப் பன்னிரு திருமுறையின் உட்பொருளும் பிரணவப் பொருளாய்—பரம் பொருளாய் அமைந்து விளங்குகின்றது என்றறிதல் வேண்டும்.

திருமுறை தொகுக்கப்பட்ட வரலாறு திருமுறை கண்ட புராணம் எனும் பெயரால் கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியாரால் பாடப்பட்டுள்ளது. அதன்கட் கூறப்படும் செய்திகளை வரலாற்றுலகம் நம்பத் தயங்கினும், சைவ உலகம் ஏற்றுப் போற்றுகின்றது. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகியோர் தோன்றித் தமிழகத்தும் அதற்கப்பாலும் உள்ள சிவத்தலங்களுக்குச் சென்று பதிகம் பாடிச் செய்த தொண்டின் பயனுகத் தமிழ் மக்களிடையே பக்தி உணர்வு வீறு கொண்டது. அவர்கள் அமைத்த பதிகப் பெருவழி மக்கள் பலரும் மகிழ்ந்து சென்று பயன் கொள்ளும் அரச பாட்டையாக அமைந்தது. சமயகுரவர்கள் பாடிய பதிகங்களை அந்தந்த தலமக்கள் உவந்து பாடி மகிழுமாறு தலபற்றினை அப்பதிகங்கள் ஊட்டின. பதிகம் பெறத திருக்கோயில்களில் அவற்றைப் பாடி வழிபடுவதற்கான ஏற்பாடுகள் தோன்றலாயின. சிவனடியார்கள் பல திருப்பதிகங்களை இனிய இசையில் பாடிச் சென்று வழிபடுவாராயினர்.

சிறந்த சிவபக்தரும், அபயகுலசேகரன் என்னும் சிறப்புப் பெயர் கொண்டவருமான இராசராசசோழன் திருவாரூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டபோது, ஆண்டுப் போந்த சிவனடியார்கள் பாடிய மூவர் தேவாரப் பதிகங்கள் சிலவற்றைக் கேட்டுப்பேரின்ப மெய்தினன் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஒதுவார் தமை நன்னெறிப்படுத்தவல்ல அமுதப் பாடல்களில் சிலவற்றையே கேட்க முடிந்து இன்புற்ற வேந்தன், தேவாரப் பதிகங்கள் அனைத்தையும் தேடி திரட்டும் அவாக்கொண்டு முயன்று முடியாது கவற்சி மிக எய்தினன். திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் திருவருள் பெற்று விளங்கும் நம்பியாண்டார் நம்பி என்னும் ஆதிசைவச் செம்மலின் சிறப்புணர்ந்த வேந்தன் அவரை அடைந்து, 'மெய்ப்புகழ் சேர் மூவர் தமிழ் தொண்டர் செய்தி' பூதலத்தில் விளக்கமுறுமாறு அருள் செய்தல் வேண்டுமென வேண்டிக் கொண்டான். அரசனுடைய அவாவில் அமைந்து கிடக்கும் அன்பினை அறிந்த நம்பியாண்டார் நம்பி பிள்ளையாரிடம் மூவர் தேவாரத் திருமுறைகளின் இருப்பிடத்தையும் நாயன்மார் வரலாற்றையும் தமக்கு உணர்த்தியருளுமாறு வேண்டிக் கொண்டார். பிள்ளையார் அருளால் மூவர் தேவாரம் எல்லையில் ஆனந்த நடனமிடும் தில்லைக் கூத்தனின் தில்லையம்பலத்தருகில் மூவர் கை முத்திரையுடன் ஓர் அறையில் அடுக்கிக் காப்பிட்டு விளங்கும் உண்மையை உணர்ந்தார். நம்பியும் வேந்தனும் தில்லைக்குச் சென்று திருமுறை உண்மையினை தில்லை வாழ் அந்தணர்க்கறிவித்து அறையைத் திறக்குமாறு வேண்டினர். மூவர் கை முத்திரையுடன் காப்பிடப்பட்டிருப்பதால் அம்மூவரும் வந்தாலன்றி அறையைத் திறவோம் என்று அந்தணர்கள் கூறக் கேட்ட வேந்தன் தில்லைத் தேவற்கும், தேவார மூவர்க்கும் வழிபாடியற்றி வீதி வலம் வரச் செய்து, அறைக்கு முன்னே மூவர் திருமேனிகள் எழுந்தருளுமாறு செய்து அறையைத் திறக்க வேண்டினன். அரசன் ஆணையால் திறக்கப்பட்ட அறைக்குள் சென்றவர்கள் அளவிலாத் துன்பம் எய்துமாறு மூவர் பாடிய தேவாரப் பதிகங்கள் சிதல் வாய்ப்பட்டுச் சிதைந்து கிடக்கக் கண்டனர்.







# ‘கள்வனைக் காட்டும் பாடல்’

ச. தண்டபாணி தேசிகர்

பால்வடியும் பாடலிலே ஞானமுண்டபிள்ளை யார் உள்ளத்தைக் கவர்ந்த கள்வன் பிரமாபுர மேவிய பெம்மானாகிய இவன்தான் என்று சுட்டிக் காட்டினர். காட்டியும் அடையாளங்கள் போதுமானவையாக இல்லை. ஆகவே அவன் அணியும் அணிகளைக் கூறுகிருள்:

கள்வனே எந்தவகையாலும் அடையாளங் களால் கண்டுபிடிக்க இயலாதவன். வடிவே யில்லாதபோது அடையாளங் காண்பதி யாங் ஙனம்? ஆதலால் அவன் அணிகளைக் கொண்டு அடையாளஞ் சொல்லுகிருள்.

கள்வன் ஞானிகள் உள்ளத்திலும் ‘பாலிற் படுநெய்போல’ மறைய நிற்கும் மாமணிச் சோதியான். அவன் உருவைக் கொண்டு அறிய இயலாது. ஆனல் அவ்வுருத் தாங்கி யுள்ள அணிகளைக் கொண்டு அறியலாமே என்கின்ருள்.

அணிகளோ மாயாகாரியமான உடலையுடைய ஆமை, பன்றி, நாகம் இவற்றின் உறுப்பும் உறுப்பியும். ஆகையால் மும்மலங்களோடு கூடிய சகலான்மாக்களாலும் உணரக் கூடியவை. புலனுகுபவை. ஆதலால் அவற் றைச் சொல்லிக் காட்டி (ஆதேயமான்) இடத்தி லுள்ளனவாகிய இவற்றைக் கொண்டு, இட மாகிய உறுப்பும் உறுப்பின் கூட்டமாகிய முதற் பொருளும் இருக்கத்தானே வேண்டும் என்று சிந்துத்துக் காணுங்கள் என்கின்ருள்.

அடையாளம் 1:

அவனுடைய அகன்ற மார்பிலே மதாணி போலே ஆமையோடு தென்படும். ஆமையோ பல யுகங்கள் கண்டது. நன்ருக முதிர்ந்தது. அதன் ஓட்டை வெற்றிக் குறியாக அணிந்திருக் கிருன் என் உள்ளங்கவர் கள்வன் என்கின்ருள்.

முற்றலாமை-முதிர்ந்த ஆமையின் ஓடு. ஆமை போன்ற முதற்பொருளின் பெயர் அதன் சினையாகிய ஓட்டினை இங்கு உணர்த்துகிறது.

இந்த ஆமை ஆதிகமடம். உலகங்கள் அனைத்திற்கும் ஆதாரமாய் இருந்து தாங்கு வது. திருமாலின் பிறப்பில் இரண்டாவதாக விளங்குவது. அதனல் உலகம் நிலைத்திருக்க நாம்தாமே காரணம். நாம் இல்லையானல் உலகம் எங்கே? உயிர்கள் எங்கே? என்று எண்ணியது. இறுமாப்புக் கொண்டது. அதனல் கடலையும் உலகையும் கலக்கத் தொடங்கியது. தேவர்கள் திருக்கயிலைக்குச் சென்று விண்ணப்பித்தார்கள். இறைவன் ஆதிகூர்மத்தைக் கொன்று அதன் ஓட்டை மார்பில் மதாணியாகப் பூண்டனர் என்பது வரலாறு.

சமுதாயத்தில் யாருஞ் செய்ய முடியாத காரியத்தை ஒருவன் செய்துவிட்டால் அவ டம் ஆணவம் தலைதூக்கி நிற்பது இயற்கை. ஆற்றலும் அறிவும் ஆயுளும் அவற்றுடன் அதிகார வன்மையும் இணைந்து விட்டால் என்ன தீங்குதான் செய்யத் தோன்ருது. அவற்றைச் செய்தது ஆதிகூர்மம்.

செருக்கை யடக்கிச் சிந்தையைத் தூய்மை யாக்கி ஆளுதல் ஆண்டவன் கடமை. ஆதலால் சிவபெருமான் ஆதிகூர்மத்தைக் கொன்று அதனைப் பற்றி நின்ற ஆணவத்தை விரட்டித் தூயதாக்கி, உலகவரனைவரும் இதனை ஒரு பாடமாகக் கற்றுக் கொள்ளட்டும் என்ற திரு வுள்ளக் குறிப்போடு மார்பில் அணிந்தார் என்பதாம்.

சொல்கிறவளோ காதலி. அவள் தன் கணவனைப் பொன்னணியும் மணிமாலையும், வயிரமதாணியும் அணிந்த பேரழகனைக் காண வேண்டும் என்று விரும்புகிறவள். அவள் கண்டதோ ஆமையோட்டு மதாணி. இது உண்மையன்பிற்கு, தாம் விரும்பாது-தம்மை விரும்பி ஏற்றுக் கொண்ட உயர்பேரருளுக்குப் புறவணிகள் தடையாகா என்ற உண்மையை உணர்த்துகிறது.

அணிபவருக்கு அணியாகலாம். பார்ப்பவருக்கு அணியாகுமா என்பது சிந்தனைக்குரிய ஒன்றுதான். அணியழகுக்காக அணியப்படுவனவும், அறிவு ஆற்றல் வெற்றி இவைகட்காகச் சூடப்படுவனவும் என இருதரத்தன. அவற்றுள் இது செயற்கரிய செய்த வெற்றிக்காக அணியப் பெற்ற விரச்சின்னம்.

இதனை ஞானசம்பந்தப் பிள்ளையார்,

"ஆகந்தேர்கொ ளாமையைப்பூண்ட அண்ணல்" (சம் 3 : 300-2) என்று பாலுண்ட பிள்ளையாரும், "இளஆமை தாங்கும் மார்பில்" (அப் 1:72-7) என்று கல்லே தெப்பமாக் கொண்ட கடவுள் மாமுனிவரும், ஆமைத் தாலியர் (சுந் 7 : 53 : 5) என்று ஆலாலசுந்தரரும் அறிவிக்கின்றார்கள்.

அடுத்த அடையாளம் இளநாகமோடு......
என்பது

நாகம்-பாம்பு. அது புற்றில் வாழும் பாம்பன்று. நினைத்தவுடன் அருளையும் ஆக்கத்தையும் வழங்கக் கூடிய முனிவர்களால் வேள்விக் குண்டத்திலிருந்து எழுப்பப்பெற்றவை. கொடிய நஞ்சுடையவை. கொல்வதற்கென்றே ஏவப்பட்டவை. அவற்றை இறைவன் காதணியாக, கழுத்தணியாக-அரைஞாணகை-கங்கணமாக-முடிக்கயிருக-தோள்வளையாகக் கொண்டார். அவை சீற்றந்தணிந்து தன் செயலற்றுத் தலைவனிட்ட கட்டளைப்படி கிடக்கின்றன. அதனால் அவற்றிற்கு அவலக் கவலையும் கையாறும் அழுங்கலும் இல்லை. நஞ்சுடன்பிறந்த அமுதத்தை யுண்ட அமரர்க்கே அழியாத இளமை இருப்பதுபோல, இறைவன் திருமேனியைச் சார்ந்த பாம்புகள் என்றும்இளமையோடிருத்தலின் இளநாகம் எனப்பெற்றது.

நாகம் இறைவன் திருமேனியிற் பல இடங்களில் விளங்குதலை ஞானசம்பந்தப் பெருமான் "அறையார் கழன்மேல் அரவாட" என்றனர் (1: 87-5) அப்பர்சுவாமிகள் "மூவாத மூர்க்கப் பாம்பு அரையிற்சாத்தி," (அப்பர் 3 : 27-4) என்றும், "ஆர்த்தான் அழல்நாகம் அரைக்கு நாணு" (ஷி 3 : 298-1) என்றார்கள். சுந்தரர் பெருமான் "ஆடரவம் அரைக்கசைத்த ஐயர்", "இளநாகமார்த்த" சுந்தரர் (83-8, 28-7) என்றுரைத்தருளினர்.

மூன்றாவது அடையாளம் ஏனமுளைக் கொம்பு பூண்டு என்பது. ஏனம்-வெண்பன்றி. இது ஆதிவராகம் எனவும் வழங்கப்பெறும். இது திருமால் தாங்கிய பிறவிகளுள் ஒன்று. இதன் கொம்பு முளைபோல வெண் நிறத்ததாய் இருப்பது இரு பக்கங்களிலும் இருப்பது.

ஆதிவராகமாகத் தோன்றிய திருமால், இரணியன் அழித்த உலகை மீட்டும் கொம்பினுனியிற் காத்தமையின் செருக்குற்று உலகை அழிக்கத் தொடங்கினர். சிவபெருமான் கருணைபூத்து, அவர் செருக்கை யடக்கி, அவருடைய கொம்பிரண்டையும் இளநாகத்தோடு திருமார்பில் அணிந்தனர் என்பதாம்.

பன்றியின் கொம்பு அதன் வளர்ச்சிக் காலத்து முன்வாயின் இருபுறத்தும் பிறைமதி போல வளர்வது அதனைச் சிவபெருமான் செடியின் முளையைப் போல எளிதாக அகழ்ந்தனர் என்பதாம்.

நான்காவது அடையாளம் 'வற்றலோடு கலனாப்பூண்டு' என்பது. வற்றலோடு-நிணம்வற்றிய ஊனீர் புலர்ந்த மண்டையோடு. அது பிரமகபாலம். அதனைப் பெருமான் பிச்சைக்கலமாகத் திருக்கரத்தில் தாங்கினர் என்பதாம்.

திருக்கண்டியூரில், பிரமன் ஐந்துதலை நான்கு திருக்கரங்களோடு விளங்கித் தம் படைப்புத் தொழிலை நன்கு நடத்தி வந்தான். அதுபோது அவனுக்கே ஒருவியப்பு விளைந்தது. சிவபெருமானுக்கும் ஐந்துதலை. நமக்கும் அப்படித் தானே! நாம் எந்த வகையில் சிவபெருமானிற் குறையுடையேம் என்றெண்ணினன். செருக்கு மிகுந்தது. தீமைபல செய்தான். அதனாற், சிவபெருமான் தம் திருக்கரத்தால்

உச்சித்தலையைக் கிள்ளினர். அந்தத் தலையின் ஊன்வற்றிய ஓட்டைப் பலிக்கலனாகக் கொண்டார் என்பது வரலாறு.

இங்ஙனம் விலையற்ற ஆமையோடும் பன்றிக் கொம்பும், மண்டையோடும் அணிகலன்கள். தொழிலோ பலி ஏற்றல். இந்த அடையாளங்கள் வேறு எவர்க்கும் இல்லாத சிறப்படையாளங்கள். இவற்றை யுடையவரை யான் காதலிக்கின்றேன். அவர் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டார் என்றால் அதற்கோர் ஏது இருத்தல் வேண்டும்.

'ஏற்பது இகழ்ச்சி,'

"ஆவிற்கு நீர் என்றிரப்பினும் நாவிற்கு
இரப்பின் எளிவந்ததில்"

என்பன அவர் அறியாதன அல்ல. இருந்தும் இரக்கின்றார். அவர் நிலையறிந்தும் யான் காதலிக்கின்றேன்.

"யான் வலியன்; காத்தற்றொழிலைச் செய்பவன் என்றிருந்தவரின் முனைப்பை யடக்க மார்பிற் குருதியை இரந்து பெற்று, செருக்கடக்கி யாட்கொண்டது போல-'எங்களவர்களே தவ ஒழுக்கங்களிற் றலைசிறந்து ஆக்கமும் கேடும் அருளும் தரத்தினர்' என்றிருந்த தாருகவனத்து முனி பன்னியர்களின் செருக்கடக்கி ஆட்கொண்டதுபோல-அவர் பிச்சை ஏற்பது உயிர்களாகிய எம்மனோரின் முனைப்படக்கவே ஆதலானும், இத்தகைய செயலைச் செய்து உயிர்களை யாட்கொள்வார் பிறரின்மையானும் யான் அவர்பால் மனம் போக்கினேன். அவர் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டார் என்கின்றாள்.

இங்ஙனம் அடையாளங் கூறியவள் அடுத்து அவர் வாழிடங்கூறுகிறாள். 'பெரியார் கையால் கழல் தொழுது ஏத்தும் பிரமாபுரம்' என. அவமதிப்பும் ஆன்றமதிப்பும் இரண்டும் மிகைமக்களான் மதிக்கற்பால, ஆகையால் என் உள்ளங்கவர் கள்வன் வாழிடமே பெரியோர் போற்றும் பெருமையுடையது. மேலும் பெரியோர்கள் கல்வி கேள்வி யிரண்டினும் சிறந்தோர். அவர்கள் போற்றுந்தகையது, ஊர் மட்டுமன்று; என் தலைவனுடைய திருவடிகளும் தொழுந்தகையன எனத் தலைவன் பெருமையைக் கூறி வியக்கின்றாளாம்.

கற்றல்-அலகுசால் கற்பின் அறிவு நூல்களை ஐயந்திரிபற மரபுவழி நிற்பாரிடைக் கற்றல். கேட்டல்-அங்ஙனம் கற்பதோடமையாது கற்றார் பிறரிடைக் கேட்டல். கற்றலிற் கேட்டலே நன்றாதலானும், கற்றீண்டு தலைப்பட்டார் எய்துவர் எஞ்ஞான்றும் மற்றீண்டு வாரா நெறி யாதலானும், கற்றல் கேட்டலுடையவர்களே பெரியர். அவர்கள் கைதொழும் இடம் பிரமாபுரம். அவர்கள் தொழுந்தகையது திருவடி என்ற உண்மைகளை யுணர்த்துவது இப்பகுதி.

அங்ஙனம் பெரியார் ஏத்தவே புகழுக்குகந்த பெருமான் அவர்கட்கு அருள் வழங்க இடபமேறி ஓடோடியும் வருகிறான் என்பாள் பெற்றமூர்ந்த பெம்மான் இவன் அன்றே என்று சுட்டுகிறாள்.

அழகல்லாதனவும், அழகு செய்யாதனவுமாகிய அணிகளும் இறைவன் அணிதலால் பேரழகு பெறுகின்றன; அழகைச் செய்கின்றன; ஆதலால் என் உள்ளம் அவனாற் கவரப் பெற்றது. அவனைக் கைதொழுதாற் போதும் ஏத்தினாற் போதும்; விடையூர்ந்து விரைந்து வருவான்; அருள் வழங்குவான் என இறைவனுடைய எளிவந்த நிலையையும் இன்புறுத்து நிலையையும் உணர்த்துகிறாள் தலைவி. நீவிரும் இந்நிலையறிந்து தெளிந்து எம்போல ஈடுபடுங்கள் இன்புறுங்கள் என்கின்றாளாம்.

முற்றலா மையிள நாகமோ டேன
முளைக்கொம் பவைபூண்டு
வற்றலோ டுகல னாப்பலி தேர்ந்தென
துள்ளங் கவர்கள்வன்
கற்றல்கேட் டலுடையார்பெரி யார் கழல்
கையால் தொழுதேத்தப்
பெற்றமூர்ந் தபிர மாபுர மேவிய
பெம்மான் இவன் அன்றே.

# அருளாட்சியில் சில கல்வெட்டுகள்

குழந்தைகள் உலகம் ஏ. ஜி. சுப்பிரமணியம்

"நான் உணவு உட்கொண்டிருக்கும் போதும்; அந்தப்புரத்திலோ, உள்ளறைகளில் இருக்கும்போதும்;கன்றுகாலிகளைக் கவனித்துக் கொண்டிருக்கும் போதும்; உல்லாசமாகச் செல்லும் போதும்; மத வழிபாடுகளில் ஈடுபட்டிருக்கும் போதும்; எந்த நேரத்திலும், எந்த இடத்திலும், என் அதிகாரிகள் என்னைக் காணவும், என்னிடம் என் குடிமக்களின் குறைகளைப் பற்றி கூறிக் கொள்ளவும் ஏற்பாடு செய்திருக்கிறேன்."

எந்த நேரத்திலும், எந்த இடத்திலும், குடிமக்களின் குறைகளைக் கேட்டு அதைத் தீர்த்து வைப்பதில் ஆர்வம் காட்டும் இந்து ஆட்சியாளர் யார்? இந்த அற்புதமான கல்வெட்டு எவர் காலத்தில் நடப்பட்டது?

"நான் செய்யும் வேலையைப் பற்றி எனக்கு முழு திருப்தி ஏற்படுவதில்லை...
எல்லா மக்களின் நலன்களைப் பேணுவதைத் தவிர வேறு முக்கிய வேலை எனக்குக் கிடையாது!"

இவ்வாறு கல்வெட்டில் மனம் திறந்து பேசும் அந்த அரசனைப் பற்றி நாமும் தெரிந்து கொள்வது நல்லதல்லவா?

"நற்காரியம் செய்வது கடினம். என்பிள்ளைகளும், பேரன்களும் காலம் உள்ளவரை என் சந்ததியாரும் என் உதாரணத்தைப் பின்பற்றுவராயின் அவரும் நற்காரியம் செய்தவராவர்!"

தான் மட்டுமல்ல; தன் வம்சத்தில் தோன்றும் யாவரும் நல்ல காரியம் செய்ய வேண்டுமென்று எதிர்பார்க்கும் இந்த உயர்ந்த மனிதர் யார்?

"நான் உழைக்கிறேன். எதற்காக?
உயிர்கள் யாவற்றையும் இவ்வுலகில் மகிழ்ச்சியுடன் வாழ வைக்க வேண்டும். மறுமையில் அவை சுவர்க்கத்தையடைய நான் உதவ வேண்டும்."

"இது நல்லது; இதைக் கட்டாயம் செய்வேன்". இவ்வாறு ஒவ்வொருவரும் மன உறுதியுடன் செயலாற்ற வேண்டும். "நான் அதிகாரிகளை நியமிக்கிறேன். ஏன்? இக் கெட்டிக்காரியான தாதி என் குழந்தையை நன்கு கவனித்துக் கொள்வாள் என்று எண்ணி ஒரு தாதியிடம் தன் குழந்தையை ஒப்புவித்து ஒரு மனிதன் நிம்மதியாக இருக்கலாம். அது போலவே மக்களின் நலத்தைக் கவனித்துக் கொள்ளவும், அவர்கள் இன்பமுடன் வாழத் துணை செய்யவுமே அதிகாரிகளை நியமிக்கிறேன்"

இவ்வாறு தன் கல்வெட்டுகளில் தன் எண்ணத்தைச் செதுக்கி வைத்த மன்னன் யார்?

அசோகன்

சுமார் இரண்டாயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முன்பே தோன்றினான் இம்மன்னன்!

"எல்லா மனிதர்களும் என் குழந்தைகளே!" என்று சொல்லி, தன் பாசத்தைப் பொழிந்தான்.

அசோகனுடைய அருளாட்சியை அர்த்த சாஸ்திரத்தின் ஒரு கருத்து பிரதிபலிக்கிறது!

The king shall maintain the orphan the aged, the infirm, the afflicted and the help less"—Arthasasthra.

அசோகனுக்குப் பெருமை சேர்ப்பது அவனுடைய அருளாட்சியே!

"அனாதைகளுக்கு மறுவாழ்வு, வயதானவர்களுக்கு ஓய்வு இல்லம், ஊனமுற்றவர்களுக்கு ஆதரவு...இப்படிப் பல சமூக நலத் திட்டங்களை பற்றி அன்றும் இன்றும் ஆட்சியிலிருப்போர் நினைக்கிறார்கள். அப்படிப்பட்ட கருணையுள்ளவர்கள் திருவடிகளை நாமும் வணங்கிப் போற்றுவோம்!

ஆகவே அருளாட்சி ஏற்படும்போது மக்கள் துன்பங்கள் நிச்சயம் நீங்கும். அருளாட்சி செய்பவரைப் பாராட்டுவோம்!

அசோகனுடைய அருளாட்சியைப் பற்றி நாம் நன்கு தெரிந்து கொள்ள நாடெங்குமுள்ள பல கல்வெட்டுகள் நமக்குப் பெரிதும் துணை புரிகின்றன.

வரலாற்றில் ஒளி விளக்காக விளங்கும் இம் மன்னனைப் பற்றி உலகப் புகழ் மிக்க வெல்ஸ் கூறுவது என்ன?

"Amidst the temn and thousands of names of monarchs that crowd the columns of history, their majesties and graciousness and screnities and royal highness and the like, the name of Asoka shines, and shines almost alone a star. From the Volga to Japan his name is still honoured. China, Tibet even India, through it has left his doctrine, preserve the tradition of his greatness. More living men cherist his memory today than have ever heard the names of *Constantine* and *Charlamogre*".

*H. G. Wells.*

உ

# "சூடிக் கொடுத்த சுடர்க்கொடி"

புலவர் த. கோடப்பிள்ளை, எம்.ஏ.,

## காட்சி 9

இடம் : பெரியாழ்வார் வீடு

நேரம் : காலைப் போது

உறுப்பினர் : கோதை, பெரியாழ்வார்

கோதை : கண்ணா! வா, விளையாட போகலாம். இன்று நல்ல மாலை! நான் எத்தனை நாளாகச் சூடி நன்ருக இருக்கிறதா இல்லையா என்று பார்த்துத் தருகிறேன். சூடிக் கொடுக்கிறேன். நீ என்னேடு விளையாட வருவாய் என்று தானே, வா கண்ணா! இப்போ சொல்லு கண்ணா! நான் எப்படியிருக்கிறேன் இந்த மாலையோடு நான் உனக்கு எப்படி தோன்றுகிறேன். நான் உன்னேடு விளையாட ஒத்திருக்கிறேனு? அழகாக இருக்கிறேனு? உனக்கு ஏற்றவளா நான்? சொல் லேன் கண்ணா... நான் உனக்கு ஏற்றவள் தானே? பேசமாட்டியா.... அப்படியானு நான் கழற்றி விடுகிறேன் போ...

பெரியாழ்வார் : [வந்து பார்த்து விட்டு] கோதை! அபச்சாரம்!.... அபச்சாரம்!... அபச்சாரம்!

கோதை : அப்பா!

பெரியாழ்வார் : சீ.. நீ ஒரு பெண்ணுட்டம்! ஐயோ ஆண்டவனே! பெருந்தீங்கு செய்து விட்டாளே! வடபெருங்கோயிலுடைய வள்ளலே! உனக்கு சாத்தும் திருமாலையை இந்தப் பாவி சூடிப் பார்த்து விட்டாளே! என்ன தீங்கு! ஐயையோ! உன்னைப் பார் என்ன செய்கிறேன் என்று? [அடிக்கிருர்]

கோதை : அப்பா! அப்பா!

பெரியாழ்வார் : தோட்டத்திலே யாரும் கேட்பாரற்றுக் கிடந்த உன்னை எடுத்து வளர்த்தேனே, இந்த அபச்சாரம்செய்வதற்காகவா? ஐயோ... என் திருமாலுக்கு இடும் மாலையைக் கெடுத்து விட்டாளே! ஐயோ... நான் பாவி, பாவி! மால் வண்ணா! மாலை தூய்மை கெட்டது. தூய்மை கெட்டது. அந்தோ, இன்றைக்கு மாலை இல்லையே... நான் என் செய்வேன்?

(போகிருர்)

கோதை : [புலம்பிக் கொண்டே] கண்ணா! நீ என் மாலையை ஏற்றுக்கொள்ள மாட்டியோ! அப்பா அடித்து விட்டாரே. உனக்குச் சூட வேண்டிய மாலையை நான் சூடி விட்டேனென்று கண்ணா! நான் சூடிய மாலை உனக்குப் பிடிக்காதா? இத்தனை நாளா நீ விரும்பி சூடிக் கொள்ளவில்லையா? போ... கண்ணா! நான் உன்னேடு காய் விட்டுட்டேன்... போ வேண்டாம்... நான் போகிறேன்.

(நம்பியும் ரெங்கனும் வருகிருர்கள்)

நம்பி : கோதை! கோதை!

ரெங்கன் : கோதை! கோதை! ஏம்மா அழுகிறே?

நம்பி : அங்கே அப்பா அழுதுகிட்டு இருக்காரு!

கோதை : ஆ... அப்பா அழுகிருரா?

ரெங்கன் : ஆமாம்மா, அழாதேம்மா... வாம்மா...

நம்பி : வாம்மா...

## காட்சி 10

இடம் : பெரியாழ்வார் வீடு

நேரம் : இரவு

உறுப்பினர் : பெரியாழ்வார், திருமால், கோதை.

நிகழ்ச்சி : பெரியாழ்வார் கனவு காணல்.

திருமால் : பட்டர் பிரானே!

பெரியாழ்வார் : [கனவில் எழுந்து] எம்பெருமானே!

திருமால் : வழக்கமாக நீ சாத்தும் பூமாலையை இன்று ஏன் சாத்தவில்லை?

பெரியாழ்வார் : பாற்கடலில் பள்ளி கொண்ட பைங்கண்ணா! அம் மாலை தூய்மை கெட்டு விட்டது, தூய்மை கெட்டு விட்டது அருள் வள்ளலே! என்னைப் பொறுத்தருள்க. நாளை தூய்மையுடைய துளபமாலை அணிந்து விடுகிறேன். இன்றோ தூய்மை யில்லா மாலையை எவ்வாறு உமக்குச் சாத்துவேன் பெரும!

திருமால் : பட்டர் பிரானே! நீ தொடுத்திருந்த பூமாலை எவ்வாறு தூய்மை கெட்டது?

பெரியாழ்வார் : தேவா எவ்வாறு சொல்வேன்... ஆலிலை அமர்ந்த அழகா! தேவர் பிரான் நீ சூட வேண்டிய மாலையை ஒரு மானிடப் பெண் சூடி அதன் தூய்மையைக் கெடுத்து விட்டாளே!

திருமால் : [சிரித்து] பட்டர் பிரானே! அம் மாலையே எமக்குப் பிடித்தமாகும். கோதை சூடிய மாலையே எமக்குப் பெருமகிழ்ச்சியைத் தரும்.

பெரியாழ்வார் : ஆ.......

திருமால் : வழக்கமாக அவள் சூடித்தானே எனக்கு அனுப்புகிறாள். அவள் கூந்தலிலே சூடிய மலர்மாலை எவ்வளவு மணம் தருகிறது!

பெரியாழ்வார் : என்ன?

திருமால் : ஆம், கோதை சூடிக் கொடுத்த மாலையே ஏற்புடையது. எமக்கு உகந்தது; எமக்கு உகந்தது.

[திருமால் மறைய கனவு விழித்து எழுகிறார் பெரியாழ்வார்]

பெரியாழ்வார் : ஆ...எம்பெருமான் பெருமையே பெருமை! என்னே அவன் விளையாடல் கோதை! கோதை! அம்மா கோதை!

கோதை : (விழித்து) அப்பா கூப்பிட்டீங்களா!

பெரியாழ்வார் : ஆமாம் அம்மா; கோதை! தெரியாமல் உன்னை அடித்து விட்டேன். கோதை நீ இனிமேல் நாள்தோறும் வடபெருங் கோயிலுடையானுக்குச் சூடிக் கொடுக்க லாம். ஆம், சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே! நீ சூடிக் கொடுக்காமல் இறைவன் சூடார். நீ சூடியே கொடு.

கோதை : அப்பா! நான் செய்தது தப்பில்லையே?

பெரியாழ்வார் : இல்லையம்மா! இல்லை. அதுதான் எம்பெருமானுக்கு உகந்ததாம். நீ சூடியே கொடு. நீ சூடிக் கொடுத்த மலர் மாலையே மிக்க மணம் தருகிறதாம். எவ்வளவு மணம் தருகிறது? என்று...ஆகா...எவ்வளவு மகிழ்ச்சியாய் கூறுகிறான் எம்பெருமான்! எம்பெருமான் மகிழும்படி நீ உன் கூந்தலில் சூடி அளிக்கிறாய். ஆ...அப்படியானால் நீ...நப்பின்னையோ! அன்றி பூதேவியோ! அன்றி பெரிய பிராட்டியோ. கோதை! கோதை! எம்மையெல்லாம் ஆண்ட இறைவனை நீ ஆண்டு விட்டாய். அவனை நீ ஆட்கொண்டாய். ஆம் கோதை! நீ ஆண்டாள்; ஆண்டாளாவாய் ஆண்டாள்! ஆண்டாள்! ஆம் ஆண்டாள்! ஆண்டாள்.

(தொடரும்)

# தோத்திரப்பா விளக்கம்





## திருமங்கையாழ்வாரின் ஊடல்

திருமலைநல்லான்

வைணவத்தைச் சார்ந்த மிகச் சிறந்த மெய்யடியார்கள் ''ஆழ்வார்கள்'' எனப்படுகின்றனர். ''ஆழ்வார்'' என்னும் சொல் மதிப்பிற்குரிய தலைமை வாய்ந்த பெரியோரைக் குறிப்பதாகத் தெரிகிறது. ''வயிற்றிற் பிறந்தவனே யாகிலும் ராஜமஹிஷியாகப் பட்டம் கட்டினல்'ஆழ்வார்' என்றிறே சொல்லுவது என்று திருநெடுந் தாண்டகம்'' ''ஆம் பாசுர வியாக்கியாநத்திற் பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்திருப்பது காண்க. சைவத்துறையில் ''நாயன்மார்'' என்று வழங்குவதை நோக்கும்போது ''ஆழ்வார்'' என்பதற்கு நாம் கூறிய பொருளின் ஏற்புடைமை நன்கு புலனுகும்.

இறைவனல் இயல்பான தன் பேரருளுக்கு முழுதும் இலக்காக்கப்பட்டவர்களே ஆழ்வார்கள். அங்ஙனம் ஆக்கப்படுவதற்கு முன்பு ஏனைய மக்கள் போலக் கண்ணுற் கண்டதன்றிக் காணப்படாததொன்று இலது என்னும் நிலையில் இருந்தவர்களே அவர்கள். சாத்திரங் கொண்டு திருத்தவொண்ணுத நிலை அன்னுரது. கண்ணுற்காணும்தெரிவைமார் உருவமே மருவி நிற்பவர்கள் காதிலே சாத்திரம் எங்ஙனம் ஏறும்? இனி, திருத்தும் வழி யாது? தன்னையும் கண்ணுற்காணும் பொருளாக்குவதுதவிர வேறு வழி தோன்றவில்லை இறைவனுக்கு.ஒண்சுடர்க் கற்றையான தன் திருவுருவைக் கண்ணுக்கு இலக்காகக் காட்டி மெய்யுணர்வூட்டி அன்னுரை ஆட்கொள்ளும் நோக்கத்துடன் இறைவன் ஆங்காங்கே திருப்பதிகளிலேகோவில் கொண்டுள்ளான். நமக்குப் பதுமை வடிவில் காட்சி தருமிறைவன் தன் அருளுக்கு இலக்கானவர்களுக்குத் தன்னைப் பச்சை மேனியும், பவள வாயும், கமலச்செங்கண்ணும் வாய்ந்தவனுகக் காட்டிக் கொடுத்து ஆட்கொள்கிருன். ஆட்பட்ட அம் மெய்யடியார்களும் ''உன்னை நான் பிடித்தேன் கொள் சிக் கெனவே'' என்று இறைவனைச் சிக்கெனப் பிடித்துக்கொண்டு விடுகின்றனர். தற்காலத்தில் அந்நல்லாரைப்போல அல்லாதாரும் கோவில் கொண்டுள்ள இறைவனை [பதுமையை]ச் சிக்கெனப் பிடித்துக் கொண்டு போய்விடுகின்றனர்!

பதுமை வடிவில் நாம் காணும் இறைவனை இறை உருவாகவே நேரிற்கண்டு பேசிப்பழகி ஆழ்வார்கள் அளவளாவுகின்றனர். பதுமை நிலைமைக்கேற்பச் சில வேளைகளில் அவர்கள் திறத்திலும் இறைவன் வாளா இருப்பதும் உண்டு. அவ்வேளையில் அளவளாவும் நோக்குடன் அவனை நெருங்கிப் பெரிதும் அவர்கள் ஏமாற்றமுறுவர். அவ்வமயம் ''நடந்த கால்கள் நொந்தவோ'' ''தாளால் உலகம் அளந்த அசைவே கொல்'' என்று வாளா கிடத்தற்குக் காரணம் உலகம் அளந்த களைப்பும் போலும் என்னும் நினைப்பால் சமாதானமடைவர். திருமங்கையாழ்வாரோ வாளா இருப்பதைக் கண்டு சினம் கொள்கிருர்.அதற்கு ஏது அன்பின் முதிர்ச்சி. அன்பு ஊடல் கொள்ளும் அளவில் முதிர்கிறது. நம்மாழ்வார் முதலியோர் காதலி நிலையை ஏறிட்டுக் கொண்டு ஊடுகின்றனர். பிழைபுரிந்த காதலனும் கண்ணன் தம் முன்னே வந்து நிற்பதாகத் தம் நெஞ்சினல் பாவனை புரிந்து கண்ணனேடு அவர்கள் ஊடுகின்றனர். திருமங்கையாழ்வாரோ அந்நிலைமையோடமையாது பதுமை வடிவில் கண்ணெதிரே எழுந்தருளியுள்ள இறைவனேடு காதலி நிலைமையை ஏறிட்டுக்கொள்ளாது தாமான தன்மையிலேயே ஊடுகிருர். இது திருமங்கையாழ்வாரின் தனிச்சிறப்பு. இதனல் திருப்பதிகளிற் கோவில் கொண்ட எம்பெருமானிடம் வாய்ந்த ஈடுபாட்டின் வீறுடைமையும் பக்தி நெறியில் அவரது வேறுடைமையும் நன்கு புலனுகின்றன. அவரது ஊடலை நாமும் சிறிது கண்டு இன்புறுவோம்.

விண்ணகத்தில் முக்தி பெறுபவன் நினைப்பிட்டவைகளை எல்லாம் பெற்று மகிழ்வது போல திரு இந்தளூரில்(மாயவரத்தில்)கோவில் கொண்ட எம்பெருமான் தமக்காக நடந்து காட்ட அந்நடையழகு காண்டல் முதலிய பேறுகளைப் பெறலாம் என்று நெஞ்சிற் கோட்டைக் கட்டிக்கொண்டு புறப்பட்டார் திருமங்கையாழ்வார்.நினைப்பிட்டவைகளில் எந்தப் பேறும் அவருக்கு அங்கே கிடைக்கவில்லை. என் வேட்கையில் ஏதேனும் குறை உண்டா?

பேற்றை அளிக்கும் உறவு முறையில் ஏதேனும் குறை உண்டா? எனக்கு ஏன் பேறு கிடைக்க வில்லை என்று இன்னம்புடன் ஊடுகிறார் அவர். "ஆ ஆ என்றிரங்கி நம்மையொரு கால் காட்டி நடந்தால் நாங்கள் உய்யோமே" என்னு மவரது குரலில் இந்தளூராரின் வடிவைக் காண் பதில் அவரது அளவு கடந்த வேட்கையும், நடையழகைக் காணுவிடில் பிழைக்க மாட்டாத இரங்கத்தக்க நிலைமையும் நன்கு தோன்று கின்றன. மேலும் தமக்குப் பேறு தராவிடில் "ஆசைப்பட்டவர்கள் பெருமையாலே முடிந்து போம்படி இறைவன் கைவிட்டான்" என்று அயலார் ஏச்சுக்கு இடமாகுமே என்கிறார். "அயலாரும் ஏசுகின்றதிதுவே காணும் இந்த ளூரீரே" எச்ச உம்மை. அயலார் ஏசுகின்றது இதுவே. அண்டின நான் பேசுகின்றதுமிதுவே என்றபடி.

அயலாரது ஏச்சினால் வரும் இழுக்கை நாம் பொறுத்துக் கொள்வோமென்ன ஒண்ணாது. அத்தகைய இழுக்கு நும்மடியார்களான எமக் கும் நேர்ந்துவிடுகிறது. அது உம்மால் பொறுக்க முடியாதொன்றன்றோ? என்னும் கருத்துடன் மீண்டும் பேசுகிறார்.

ஆசைவழுவாதேத்தும் எமக்கு இங்கு
இழுக்காய்த்து அடியோர்க்குத்
தேச மறிய உமக்கே ஆளாய்த்
திரிகின்றோமுக்குக்
காசி ளொளியிற்றிகழும் வண்ணம்
காட்டீரெம்பெருமான்!
வாசி வல்லீரிந்தளூரீர்!
வாழ்ந்தே போம் நீரே.

(பெரியதிருமொழி 4. 9. 4)

[அடியோர்க்கு எமக்கு இங்கு இழுக்காய்த்து என்று இயைக்க. இங்கு-உம் திறத்தில் நீர் வாழ்ந்தே போம் என்று மாறுக]

"கிட்டாதாயின் வெட்டென மற" என்றபடி கிடைத்தற்கரிய உம்மிடம் ஆசையை விட் டொழித்தல் வேண்டும். ஆயின் உம்மிடம் ஆசை குறைவதாயில்லை. ஏனைய மற்றைப் பொருள்களில் ஆசை நாட்செல்ல நாட்செல்லக் குறையும். பழகப்பழகப் பாலும் புளிக்கும். பாற்கடற்சேர்ந்த நீரோ பயிலப் பயில இனி யீர். ஆதலின் நாட் செல்ல நாட் செல்ல ஆசை வளர்வதாயிற்றேயன்றி வழுவுவதா யில்லை. அத்தகைய ஆசை ஏத்தாமலிருக்க வொட்டுகிறதில்லை. அங்ஙனம் ஏத்தும் அடியோ மாகிய எமக்கு இழுக்கு நேர்ந்து விட்டதே. அதை உம்மால் எங்ஙனம் பொறுக்க இயலும்? தாம் இழுக்குறினும் அடியார்களை இழுக்குறாது காப்பதன்றோ உம் இயல்பு? வேறெங்கும் இழுக்கு நேர்ந்திலது. இந்தளூரில் உமது முன்னே தான் அடியோமுக்கு அது நேர்ந்துள்ளது என்னும் கருத்துடன் கூறுகிறார், "ஆசைவழுவா தேத்தும் எமக்கு இங்கு இழுக்காய்த்து அடி யோர்க்கு" என்று.

'ஐயோ! பாவம்! இந்தளூரார் கிடைத்தற்கு அரியராயினும் விடமாட்டாத ஆசையினால் ஏத்திக்கொண்டிருக்கிறார்' என்று அயலார் சொல் வதைத் தமக்கு இழுக்காக நினைக்கிறார் ஆழ்வார்

இந்தளூரீராகிய உமக்கும் எமக்கும் ஏற்பட்ட அன்பினாலாகிய இத் தொடர்பு நாம் மட்டும் அறிந்த அளவோடு நின்று பிறருக்குத் தெரியா திருப்பின், இவ்விழுக்கு நேர வழியில்லை. தேச மெல்லாம் அறிய உமக்கே ஆளாய்த் திரிகின் றோமே. இவ்விழுக்கு நேராமலிருக்க வழி இல் லாமற் போய்விட்டதே என்று அங்கலாய்க் கிறார். "தேசமறிய உமக்கே ஆளாய்த் திரிகின் றோமுக்கு" என்று.

வேறொருவர்க்கு ஆளாய்த் திரியின் அவர் தான் இவர்க்குக் குறை தீர்க்கட்டுமே என்றி ருக்கலாம். அங்ஙனன்றி உமக்கே ஆளாய்த் திரியும் எமது குறையை நீரே தீர்க்க வேண் டாமோ என்னும் கருத்துடன் உமக்கே ஆளாய் என்கிறார்.

உமக்கே ஆளான எமக்கு இழுக்கு நேராது குறை தீரச்செய்ய வேண்டுவதியாதெனின், பொன்னினும் சிறந்தொளிரும் வடிவின் அழ கைக் காட்டுதல் வேண்டும். அதனை நீர் செய்ய வில்லையே என்கிறார், "காசின் ஒளியில் திகழும் வண்ணம் காட்டீர்" என்று.

சிறப்பு மிக்க வடிவழகை எமக்குக் காட்ட வேண்டியவராயிருந்தும், ஆசைப்படும் எமது சிறுமையையும், ஆசைக்கு உரிய வடிவழகின் பெருமையையும் சீர்தூக்கிப் பார்த்து காட்டா மலிருக்கிறீரோ? வேற்றுமை பாராட்டுவதில் நீர் மிகவும் கெட்டிக்காரர்தான் என்கிறார், "எம்பெருமான்வாசி வல்லீர்" என்று.

உம்முடைய வடிவம் ஆசைப்படும் அடியார் களுக்காகவே என்று சொல்லப்படுவதை

நம்பினேம். அங்ஙனன்றி உமக்கேதான் என்னில் நீரே கட்டிக்கொண்டு இனிது வாழும் என்று தமதுஏமாற்றமும்,வெறுப்பும் தோன்றப் பேசி ஊடுகிருர் ஆழ்வார், "இந்தளூரீர் வாழ்ந்தே போம் நீரே" என்று.

இறைவன் உண்டு என்பதையே நம்பாத உலகத்தில் இறைவனது உண்மையை ஒப்புதலோடு அமையாது பதுமைவடிவில் உள்ள நிலைமையில் அவனை நேரிற்கண்டு அளவளாவும் அன்பு முதிர்ந்து ஊடுகின்ற ஆழ்வாரது பக்தியின் திறத்தை என்னென்பது!

இறைவனேடு ஊடிடுமழகும் இன்தமிழ் இன்பம் நமக்குக் கிடைத்த ஒரு தனிப்பேறு. பக்தி வளம் ததும்பும் இத்தகைய கவிதைகளை வேறெந்த மொழியிலும் காண இயலாது.

செந்தமிழைச் சொந்த மொழியாகக் கொண்டவர்களும் இத்தகைய கவியின்பம் கண்டு களிக்கக் கருத்தைச் செலுத்தாமல் இருப்பது பணம் படைத்த உலோபியின் நிலைபோல் மிகவும் இரங்கத்தக்கதே.

ஆழ்வாரது திருமொழி போலமைந்த மற்றெரு செந்தமிழ்ப் பாடலையும் இங்கே கண்டு களிக்கத் தருகிறேம்:

மீளா வடிமையுமக்கே ஆளாய்ப்
பிறரை வேண்டாதே
மூளாத் தீப் போல் உள்ளே கனன்று
முகத்தால் மிக வாடி
ஆளாயிருக்கும் அடியார் தங்க
ளல்லல் சொன்னக்கால்
வாளாங்கிருப்பீர் திருவாரூரீர்
வாழ்ந்து போதீரே.

இது வன்தொண்டர் பாடியது. கண் வேண்டிப் பாடிய இரு பாடல்களிலும் சொல்லமைப்பும் பொருட்டிறமும் ஒத்திருப்பதை உணர்ந்து வாசகர்களே இன்புறுக.




திருக்கோயில் கருவறைக்குள் சென்று இறைவனுக்குப் பூவும் நீரும் இட்டு வழிபாடு செய்யும் உரிமை சீலமுடைய அனைவருக்கும் உண்டா ? இல்லையா ?

என்ற பட்டி மன்றத் தலைப்பிற்கு வாசகர்களின் கருத்துக்கள் வரவேற்கப்படுகின்றன

—ஆசிரியர்




## சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலியார்

"சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கும் அடியேன்"

—சுந்தரர் திருத்தொண்டத் தொகை.

"புவனியிற் பூதியுஞ் சாதன
மும்பொலி வார்ந்துவந்த
தவநிய மர்க்குச் சிறப்புச் செய்
தத்துவ காரணனும்
அவனியிற் கீர்த்தித்தென்னுக்க
ரதிப னருமறையோன்
சிவனிய மந்தலை நின்றதொல்
சீர்நஞ் சிறப்புலியே"

—நம்பியாண்டார்நம்பி—திருத்தொண்டர் திருவந்தாதி.

பொன்னி மாநதிப்புனல் பரந்து வளங் கொழிக்கும் புகழ்மிக்கது சோழநாடு. அந் நாட்டில் விளங்குவது ஆக்கூர் என்னும் சிவப் பதி. இரந்தவர்களுக்கு இல்லையென்னாது கொடுத்து இன்பத்தையடையும் செல்வர்கள் நிறைந்த ஊர் என்று சம்பந்தப் பெருமானால் பாராட்டப் பெற்றது. அத்திருவூரின்கண் அருமறை அந்தணர் குலத்தில் தோன்றிய சிறப்புலியார் என்பவர் வாழ்ந்து வந்தார். சிவபெருமான் திருத்தொண்டாகிய பதிபுண் ணியச் செயல்களைச் செம்மையுடன் ஆற்றி வந்தார். அத்துடன் வருகின்ற அடியார்களை அன்புடன் வரவேற்று அமுதூட்டி, அவர்கள் வேண்டுவனவெல்லாவற்றையும் வழங்கி இன்பம் பெற்று விளங்கினார். இவை பசு புண்ணியச் செயல்களாகும். இவ்வாறு பல காலம் நிகழ்த்தி வந்து இறைவன் திருவடி நீழல் அடைந்தார்.

சிறப்புலியார் ஆயிரக்கணக்கான அடியார் களுக்கு அமுதளித்ததாகவும், அவர்களுள் இறைவனும் ஒருவராக வந்து அமுது அருந்தி னார் என்றும் ஒரு கதை வழங்குகிறது. அதற்குச் சான்றாக "ஆயிரத்தில் ஒருவர்" என்ற பெய ருடைய திருவுருவம் ஒன்றும் கோயிலில் இருக் கிறது. சிறப்புலிநாயனார், அவர் மனைவியார் இவர்களின் திருவுருவங்கள் தான்றோன்றீசர் சந்நிதியில் இருக்கின்றன.

ஆக்கூர் என்பது தேவாரப் பாடல் பெற்ற பதிகளில் ஒன்று. திருவாக்கூர் தான்றோன்றி மாடம் என்பது இதன் முழுப்பெயர். கோச் செங்கட் சோழன் கட்டிய மாடக் கோயில்களில் இது ஒன்று. அச்சோழ மன்னன் முற்பிறப்பு வரலாறு யாவரும் அறிந்தது. கோயில் கட்டு மலைமேல் இருக்கிறது. யானை புக முடியாத வாறு கட்டப்பெற்றது. "எண்தோள் ஈசற்கு எழுபது மாடங்கட்டிய திருக்குலத்து வளச் சோழன்" என்று அப்பர் பெருமானாலும், திருமங்கையாழ்வாராலும் போற்றப் பெற்ற அம்மன்னர் அறுபான்மும்மை நாயன்மாரில் ஒருவராவர்.

ஆக்கூர் மாயூரத்திற்குக் கிழக்கே 9 கல் தொலைவிலிருக்கிறது. பேருந்துகள் செல்கின் றன. புகைவண்டித் தொடர்பும் உண்டு.

சிறப்புலியார் சேவடி போற்றி.

---

கார்த்திகை மாதத்தில் வரும் சிறப்புலி நாயனார் திருநட்சத்திரத்தை யொட்டி இக்கட்டுரை வெளியிடப் பெறுகிறது.

கு. கலியாணம், எம்.ஏ., டிப்.எக்கான்.,



உ

# பிறவாமை வேண்டும்

புலவர் த. கோடப்பிள்ளை, எம்.ஏ.,

## காட்சி 9

இடம் : தெரு

நேரம் : பிற்பகல்

உறுப்பினர் : பரமதத்தன், சிவப்பழம்

பரம : (மயங்கிய நிலையில்) புனிதவதி! புனிதவதி!...சே...உன் பெயரை என் வாயால் சொல்கிறேனே...செரல்லக் கூடாது; சொல்லக் கூடாது. நீ.... மானிடப் பிறவியில்லை. தெய்வப் பிறவி. தெய்வத்தையே ஆட்கொள்ளும் ஆற்றல் பெற்ற ஆரணங்கு. அடியேன் உன் கணவனா? கூடாது, கூடாது. நீ தெய்வப் பிறவி, தெய்வப்பிறவி.

சிவப்பழம் : (வந்து) முதலாளி! முதலாளி!

பரம : நீ தெய்வப் பிறவி.

சிவ : முதலாளி! என்னங்க!...

பரம : ஆ...சிவப்பழம்! சிவப்பழம்...நான் என்ன செய்யட்டும்? ஆண்டவன் அருள் பெற்ற ஒருத்தியா என் மனைவி? ஆண்டவனையே ஏவல்கொண்ட ஆரணங்கா என் மனைவி?

சிவ : முதலாளி! தெளிந்த அறிவு பெற்ற நீங்களா இந்த மாதிரி குழப்புவது? புனிதவதியம்மா செய்த புண்ணியம் நீங்கள் மனசிலே கொண்ட ஐயப் பாட்டைப் போக்கியது. அவ்வளவுதானே. இதற்கா இத்தனை குழப்பம்?

பரம : சிவ சிவ. சிவப்பழம்! நான் குழம்பித் திரிகிறேனா? இல்லை இல்லை. சரி.... சிவப்பழம்! கடைக்குப் போய்க் கொஞ்சம் காசு வாங்கிக்கொண்டு கோயிலுக்குப் போய் அர்ச்சனை செய்து பிரசாதம் கொண்டுவா.

சிவ : சரிங்க... நான் அப்படியே செய்கிறேன். நீங்கள் வீட்டுக்குப் போங்க.

பரம : சரி, நான் போகிறேன், நீ கோயிலுக்குப் போய்விட்டுச் சீக்கிரம் வா.

சிவ : சரிங்க...போய் வருகிறேன். (போகிறான்).

பரம : அம்மா...சிவனடியார் நீ...சிவனடியாராகிய உன்னையா நான் மனைவியாகக் கொள்வது? நன்றன்று...நன்றன்று.

## காட்சி 10

இடம் : தனதத்தன் இல்லம்

நேரம் : முன் இரவு

உறுப்பினர் : பரமதத்தன், தனதத்தன், புனிதவதி, சிவகாமி

தனதத்தன் : (தன்னை வணங்கிய பரமதத்தனைப் பார்த்து) வாங்க, மாப்பிள்ளை வாங்க புனிதவதி! வாம்மா. சிவபெருமான் திருவருளால் நீங்கள் இருவரும் நலமுடன் வாழ்க! இங்கு வந்து போய்ப் பலநாள் ஆகிவிட்டதே. நீங்கள் இருவரும் அடிக்கடி இங்கு வந்து போனால் எங்களுக்கும் நன்றாக இருக்கும்.

பரம : அப்படியே ஆகட்டும் மாமா.

தன : நீங்கள் பல்வளனும் பெற்றுப் பல்லாண்டு வாழ்க.

பரம : மாமா ! இறையருள் எமக்கு எக்குறையும் வைக்கவில்லே. என்றாலும் ஒரு காரியமாகத்தான் இங்கு வந்தோம்.

## காட்சி 11

இடம் : தெரு

நேரம் : காலே

உறுப்பினர் : சிவப்பழம், நந்தி

சிவ : வா, தம்பி வா !

நந்தி : வணக்கம் அண்ணே !

சிவ : வணக்கம். என்ன நலமா இருக்கிருயா? பல நாளா ஆச்சே பார்த்து.

நந்தி : ஆமா அண்ணே. பல நாளாச்சு

சிவ : முன்னே மாதிரி ஆளா நீ? இப்போ, பார்க்க முடியுமா, என்ன?

நந்தி : அண்ணே அண்ணே ! அப்படியெல்லாம் என்னே உயர்த்தாதீங்க. எல்லாம் நீங்கள்தாமே எனக்கு வழிகாட்டினீங்க. நீங்கள் மட்டும் எனக்கு உதவி செய்து அப்படி வழி காட்டிலின் நான் எப்படி இப்படி முன்னேறியிருப்பேன்.

சிவ : முன்னேறினது மட்டுமா? ஒரு முதலாளியாகவே இருக்கிருயே. வரவு செலவு எல்லாம் மிகுதியா நடக்கிறது. ஆளேப் பார்க்கிறதே இல்லேயே.

நந்தி : என் நன்மைக்காக நீங்கள் வழிகாட்டி கொஞ்சம் முதலும் விற்கப் புதுத் துணிகளேயும் கொடுத்து உதவினீங்க. அது இன்றைக்கு என்னே வாழ வைக்கிறது.

சிவ : இப்போ சொல்லு நண்பா ! நீ வணங்கிய தெய்வம் உனக்கு நன்மை செய்ததா இல்லேயா?

நந்தி : ஆமா, ஆமாம்...செய்தது...இந்தத் தெய்வம் முன்னே செய்யலியே.

சிவ : அதைத்தான் நான் அப்பவே சொன்னேன். உனக்கு ஏன் தெய்வம் உடனே செய்யலே என்று.

நந்தி : ஏன் ?

சிவ : முதலிலே நம்பிக்கை வைக்கலே. அடுத்துப் பொய்வேடம் போட்டே, உண்மையான தெய்வ நம்பிக்கையுடையவன் என்று. அப்புறம் நீ ஒரு நிலேயா மனதை வைச்சுக்காமே அங்கும் இங்கும் அலேயவிட்டு அந்த வேலேயைச் செய்வோமா இந்த வேலேயைச் செய்வோமா என்று அலேந்தே. பொறுமையில்லாமல் பொறுமிகிட்டு இருந்தே. எப்போது உனக்குத் தெய்வ நம்பிக்கை உண்மையிலேயே உண்டாகி மனதை அலேய விடாமல் ஒருநிலேப்படுத்தி உழைக்க முயன்ருயோ அப்போதே உனக்குத் தெய்வச் சித்தம் கிட்டியது. இப்போது நல்லா இருக்கிறே.

நந்தி : அதாவது நான் முன்னே பரிபக்குவம் அடையிலே என்கிறே இல்லேயா அண்ணே ?

சிவ : ஆமாம். மேலும் மேலும் அருள்கிட்டட்டும். இந்தா திருநீறு பூசிக்கோ.

நந்தி : கொடு, கொடு...சிவ சிவ...அரகரா மகாதேவா (பூசுதல்) இப்போதுதான் சரியை கிரியை யோகம் ஞானம் என்பவற்றிலே சரியை தாண்டிக் கிரியைக்கு வந்திருக்கிறேன். இன்னும் எப்பதான் யோகம் பெறப் போகிறேனே... அப்புறம் ஞானம் பெறணும்.

சிவ : சிவ...சிவ...பார்த்தாயா மறுபடியும் அவசரப்படுகிறே. அவசரப்படாதே... பொறுத்திரு.

(தொடரும்)






முத்தித் தலங்கள் ஏழனுள், பிறக்க முத்தி தரும் தலமாகவும், பஞ்சபூதத் தலங்கள் ஐந்தனுள் பிருதிவித் (மண்) தலமாகவும், பாடல் பெற்ற திருக் கோயில்கள் மிக்கு விளங்குவதுமான தலம் காஞ்சி ஆகும்.

இப்பெருநகரில், காளத்தியப்ப சிவா சாரியார் எனும் பெயர் பெற்ற ஆதிசைவ குல வேதியர் வாழ்ந்து வந்தார். இவர் ஒழுக்கத்தில் உயர்ந்தும், கல்வி கேள்வி களில் சிறந்தும் விளங்கினர்.

நெடுங்காலம் இவருக்கு மகப்பேறு வாய்க்கவில்லை. "வேலா சரணம்! சரணம்!! என்மேல் வெகுளாமல் இனி மேலாயினும் கடைக்கண்பார்!" எனக் காஞ்சிக் குமரகோட்டத்துக் கந்தப் பெரு மானை, விரும்பி வேண்டிப் போற்றிப் பலகாலும் பணிந்து தவம் புரிந்தார்.



அப்பெருந் தவத்தின் பயனாயகக் காளத்தியப்பரின் இல்லக்கிழத்தியார் கருவுற்றார். ஒரு நன்னாளில், அந்நற் கருவிலே திருவுடையதாக வளர்ந்து வந்த மகவு ஒன்று திருஅவதாரம் செய்தது.

காளத்தியப்பர் தன் தவப்புதல் வருக்குக் "கச்சியப்பர்" எனும் திருப் பெயரிட்டு, கண்ணும் கருத்துமாக வளர்த் தார். கச்சியப்பரும், அன்பும், அடக்கமும் அறிவும் பொருந்தி விளங்கினர். தென் தமிழும், வடமொழியும் திருத்தமுறக் கற்றுச், செவ்வேளின் திருவடியில் சிந்தனையைச் செலுத்தித் திகழ்ந்தார்.

குல வழக்கப்படி, சமய தீக்கை முதலி யன பெற்றுத் தமிழ் மறைகளாகிய தேவாரம் திருவாசகம் முதலான திரு முறைகளைப் பொருளுணர்ந்து ஓதினர்.







சிவாகமங்களின் கிரியா காண்டங்களை விசேட தீக்கை மூலம் கற்றுணர்ந்தார். பின்னர் பெற்ற நிருவாண தீக்கையும், ஆசாரியாபிஷேகமும், தேவாரத் திருமுறைகள் மற்றும் சிவாகமங்களின் பொருளை உய்த்துணர ஏதுவாயின.

வடமொழி மறைகளில் கற்றுணர்ந்தவற்றைத் தமிழில் தரவேண்டும் என்று கருதினர் அதற்குத் தமிழ்க் கடவுளாகிய குமரப் பெருமானின் தண்ணருள் வேண்டி காஞ்சிக் குமரகோட்டத்து முருகப் பெருமானை வழிபட்டுத் தவங் கிடந்தார்.

ஆதியும் நடுவும் ஈறும் அருவமும் உருவும் ஒப்பும் ஏதுவும் வரவும் போக்கும் இன்பமும் துன்பமும் இன்றி, வேதமும் கடந்து நின்ற விமலனாகிய சிவபெருமான் திருவருளால், அருவமும் உருவும் ஆகி அநாதியாய்ப் பலவாய், ஒன்றாய்ப் பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி ஆகக் கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டு உலகம் உய்ய உதித்த ஒருவனாகிய திருமுருகன் ஒருநாள் கச்சியப்பரின் கனவிடைத் தோன்றினன். “சொன்னவர்களையும் ஆராய்ந்திடுபவர்களையும், திருத்தமுறக் கற்றாரையும், கற்க முயல்பவர்களையும், கசிந்து கேட்பவர்களையும் வீடு பேறடையச் செய்ய வல்லவாறு தமிழில் கந்த புராணத்தைப் பாடுக” எனக் கட்டளையிட்டுத் தாமே, “திகடசக்கரம்” என்று அடியெடுத்துக் கொடுத்தருளினன் விழித்தெழுந்த கச்சியப்பர் வேலவன் கருணையை எண்ணி வியந்து மெய் சிலிர்த்து விதிர்விதிர்த்தார்.

அதுமுதல் நாள்தோறும் கந்தப் பெருமானின் கட்டளைப்படி, கந்தபுராணத்தைத் தித்திக்கும் செந்தமிழில் பாடத் தொடங்கினர். விற்பன்னராகிய அவர் தாம் எழுதியவற்றை யாரிடம் காட்டிச் சரிபார்த்துத் திருத்திக் கொள்ள முடியும்? இறுதியில் ஒவ்வொரு நாளும் எழுதிய

பாக்களை அர்த்தசாமத்திற்கு மேல் குமரகோட்டத்து இறைவன் திருச்சந்நிதியில் வைத்து எழுத்தாணியையும் வைத்து விடுவார்.



அவர் கொண்ட நம்பிக்கை வீண் போகவில்லை. மறுநாட்காலையில் முதல் இரவு வைத்த சுவடிகளை எடுத்துப் பார்த்தால் அவர் பாடலில் ஆங்காங்குள்ள சிறு பிழைகளைக் குமரகோட்டத்து முருகன் திருத்தியிருப்பான். இப்படியாக. வேதவியாசர் செய்த கந்தபுராணத்தின் ஏழு காண்டங்களில் ஆறு காண்டங்களை 10,345, செய்யுள்களாக எழுதி முடித்தார். (ஏழாவது காண்டத்தைக் குகனேரியப்ப முதலியார் தமிழில் பாடினர்.) தொண்டை நாட்டுச் சான்றோர்களும் ஏற்க வேண்டி, அரங்கேற்ற விரும்பினர். அனைவருக்கும் அழைப்பு அனுப்பினர்.

ஒரு குறிப்பிட்ட நன்னாளில் அறிஞர் பெருமக்கள் கூடினர். காஞ்சிப் பெருநகரே விழாக் கோலம் பூண்டது. கச்சியப்பர் கந்தபுராணத்தைக் குமரகோட்டத்து இறைவன் சந்நிதியில் வைத்து வழிபாடியற்றினர். அடியார்கள் அவரை உயர்ந்த பீடத்தில், சிறப்புடன் இருத்தினர்.



கச்சியப்பர் முதற் பாடலை எடுத்து, "திகட சக்கரச் செம்முகம் ஐந்துளான்" என்ற அடிக்கு "விளங்கா நின்ற பத்துத் திருக்கரங்களும், ஐந்து முகங்களும் உடைய சிவபெருமான்" என்று பொருள் கூறினர். உடனே சபையில் இருந்த புலவர் ஒருவர் "பெருந்தகைமையீர்! திகழ்சக்கரம் என்ற சொற்கள், "திகட சக்கரம்" என்று புணர்தற்குத் தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களில் விதி இல்லையே"? என்றார். உடனே கச்சியப்பர், "இத்திருவாக்கினைச் சொல்லி அடியெடுத்துக் கொடுத்தவன் செந்தமிழ்க் குமரனே!" என்றார்.

உடனே ஐயப்பட்டவர் "அதனை முருகனே அவையறிய வெளியிட்டாலன்றி ஒப்புக் கொள்ளமாட்டோம். அரங்கேற்றவும் விடமாட்டோம் என்றார்.







முருகன் திருவருள் கிடைக்கும் எனத் திடமாக நம்பிய கச்சியப்பர் "அது நாளை நிகழும்" என்று மறுமொழி கூறினர்.

அன்றிரவு வழிபாடெல்லாம் முடிந்த பிறகு, திருக்கதவம் தாளிட்டு வெறும் தரையில் பட்டினி கிடந்தார்.

கச்சியப்பர் கண்ணயர்ந்த போது கந்தப்பெருமான் அவர் கனவில் தோன்றி, "சோழ நாட்டில் 'வீர சோழியம்' என்ற இலக்கண நூலில், சந்திப் படலத்தில் பதினெட்டாம் செய்யுளில், 'திகழ்தசம்' என்ற சொல் 'திகடசம்' என்று புணர விதியுள்ளது. நாளை சோணாட்டுப் புலவர் ஒருவர் அவ்வீர சோழியத்தைக் கொணர்ந்து பலரும் அறியக் காட்டுவார்" என்றருளினன்.

மறுநாள் கச்சியப்பர் பீடத்திலமர்ந்த போது, புலவர் ஒருவர் வீரசோழியம் எனும் இலக்கண நூலைக் கொணர்ந்து, "திகடசக்கரம்" என்று புணர விதியிருப்பதை எடுத்துக் காட்டி, சபையோரை நோக்கி "ஐயம் தெளிந்ததா?" என வினவினர். உடனே ஒளி வெள்ளத்தில் அவர் திருவுருவம் மறைந்தது.

கச்சியப்பர் உட்பட அனைவரும் திருமுருகனின் கருணைத் திறத்தை எண்ணி உளம் வியந்தனர். அவையோரும் கக்சியப்பரின் தவவலிமையை உணர்ந்தனர். புராண அரங்கேற்றம் நாள்தோறும் நடந்து ஓராண்டில் முடிவுற்றது. ஒவ்வொரு நாளிலும் தொண்டை மண்டல வேளாளப் பெருங் குடிமக்கள், அன்னதானம் செய்தனர். இறுதிநாளில் கச்சியப்பரைச் சிவிகையில் வைத்து நகர்வலம் வந்து துதித்தனர்.

கச்சியப்பரும் குமரகோட்டத்து முருகனை வழிபட்டு, ஞானநிட்டையில் அமர்ந்து முடிவில் கந்தப்பெருமானின் கழலிணைகளில் கலந்தார்.

பழ-தரும-ஆறுமுகம்

# ஐயந்தெளிதல்

தங்க-மோகன், குடந்தை.

வினா : கடவுள் நம்பிக்கையுடைய ஒருவன் அறம் பிறழ்ந்து வாழ்வதிலும், கடவுள் நம்பிக்கை யில்லாத ஒருவன் அறவாழ்வு வாழ்வது மேம்பாடுடையதல்லவா ?

இவ்வினா படிக்கச் சுவையானது. முறை யாகச் சிந்தித்தால் இதனுள் ஒரு முரண்பாடு உள்ளது தெளிவாகத் தெரியும்.

கடவுள் நம்பிக்கையுடையவன் அறம் பிறழ்ந்து வாழ மாட்டான். அறம் பிறழ்ந்து வாழ்ந்தானாயின் அவன் கடவுள நம்பிக்கை உடையவன் அல்லன். அறம் பிறழ்ந்து வாழ் பவன் காட்டும் அல்லது கூறும் கடவுள் நம்பிக்கை போலியானது.

அவ்வாறே அறவாழ்வு வாழ்பவன் கடவுள் நம்பிக்கை இல்லாதவனாக இருக்க முடியாது. அறவாழ்வில் பிறழாது வாழவேண்டும் என்ற இயல்பூக்கமானது விடாப்பிடியாக அவர்களை உந்திச் செயற்படுத்துவதாலேயே அவர்கள் அறவாழ்வு வாழ்பவர்களாக அமைகிறார்கள். அத்தகைய இயல்பூக்கத்துக்கு ஒரு பெயர் கொடுக்க எண்ணினால் அப்பெயர் 'கடவுள்' என்பதாகத்தான் முடியும்.

அறவாழ்வு வாழ்பவர்கள் இரண்டு வகை யினர். புகழ், சுவர்க்க இன்பம் முதலிய வெவ் வேறு பயன்களை அறவாழ்க்கை வாழ்வதன் மூலம்பெற்றுவிடலாம் என எண்ணி அறவாழ்வு வாழ்பவர்கள் ஒருவகை. இவர்களை "இம்மை செய்தது மறுமைக்கு ஆம் எனும் அறவிலை வணிகர்கள்" எனக் கூறுகிறது புறநானூறு.

இனி, அறத்துக்காகவே அறவாழ்வு வாழ் பவர்கள் இரண்டாம் வகையினர். "Virtue for Virtue's Sake" என்பது இவர் கொள்கை. அறத்தின் முழுமையை இவர்கள் அடையும் போது இவர்களை அறவடிவாகக் கட்டிப்பிடித்து அணைக்கும் பொருள், வேறொன்றுமன்று; கடவுளே.

அறவாழ்வு வாழ்கிறவர்கள் கடவுள் நம்பிக்கை இல்லாமல் இருக்கலாம். அறத்தைப் பற்றிய நம்பிக்கை இல்லாமல் அறவாழ்வு வாழ முடியாது. அந்த நம்பிக்கைக்கும் கடவுள் நம்பிக்கைக்கும் வேறுபாடு இல்லை. எவ்வாறு யினும் அறவாழ்க்கை வாழ்வதே முன்னையதை விடச் சிறந்தது.

எம். உமாமகேஸ்வரி, சென்னை-4

வினா: புராணத்தில் பெருங் கொடைஞனாக பேசப்பெறும் மாவலி என்பானைத் திருமால் திட்டமிட்டுக் கொன்றதாகக் குறிக்கப் பெறு கிறது. அந்தச் செயல் போற்றப்பெறுகிறது. கொல்லப்பட வேண்டிய அளவுக்கு மாவலி செய்த பாவமென்ன?

மாவாலியை விடப் பெரிய பாவம் செய்தவனை நாம் வேறு எங்கே காணமுடியும்.

ஒருவனுக்குரிய மனைவியை இன்னொருவன் தனக்குரியவள் என்று உரிமை கொண்டாடி னால் அது பெரும் பாவம் அல்லவா?

அதுமட்டுமன்று, தர்மகர்த்தாக் கொள் கையை உலகுக்கு எடுத்துக்காட்டவும், அதில் தவறுபவர்களைத் தண்டிக்கும் முறை இது என்பதைச் சுட்டிக்காட்டவும் இறைவன் செய்து காட்டிய தத்துவமே இது.

அரசன் என்பவன் இறைவனின் பிரதிநிதி யாக நின்று இறைவன் படைத்துக் கொடுத்த செல்வங்களை நிர்வகிக்கும் உரிமையைப் பெற்ற வன். தர்மகர்த்தாவாக இருந்து முறைப்படி நிர்வகிக்க வேண்டியவனே தவிர, தனக்கே உரிமை எனக் கருதி உரிமை கொண்டாடுபவன் அல்லன். மாவலியானவன் தர்மகர்த்தாக் கொள்கையை உணராது, தனக்கே உரிமை எனக் கருதினானே அதுவே அவன் செய்த பெரும் பாவம்.

மேலும், யாருக்கும் எது வேண்டினும் கொடுக்கும் ஆற்றல் தனக்குண்டு என்ற ஆணவத்தோடு, தன் பொருளைத் தானம் செய்வதாக எண்ணிக் கொடுத்தானே, அத் தகைய ஆணவம் பெரும் பாவம் அன்றோ !

இன்னொன்று : உடைமைக்குச் சொந்தக் காரனே வந்திருக்கிறான் என்று தெரிந்த பிறகும், தாழ்தல் இன்றித் திருவடிகளில் விழுந்து வணங்காமல், இவனும் என் கையில் பிச்சை ஏற்கட்டும் என்று இறுதிக் கட்டத் திலும், பரம்பொருளுக்கு முன்னிலையிலும் ஆணவத்தோடு செயல்பட்டானே. அது எத்தகைய கொடிய பாவம் !

டாக்டர் வை. இரத்தினசபாபதி,
எம்.ஏ.பி.ஓ.எல்.பிஎச்.டி

மாவலியைப் போலவே வாழ்ந்த நாயனர் ஒருவர் உண்டு. தன்னுடைய அடைக்கலப் பொருளை–தன்னுடைய துய்ப்புப் பொருளை இறைவன் அல்லன், இறைவன் அடியார் உருவில் வந்து கேட்டபொழுது இயற்பகை நாயனர் மேற்கொண்ட செயல் இங்கே ஒரு வகையில் சிந்தித்துப் பார்த்து உணர வேண்டும்.

த. மாடசாமி, மயிலாப்பூர்.

வினு :கடவுட் காட்சிபெற்ற ஞானியர்களாலும் அல்லது இறைவனுலும் தோற்றுவிக்கப் பெற்ற தாகக் கூறப்படும் சமயங்களுக்குள் முரண்பாடும் மோதுதலும் ஏற்படக் காரணம் என்ன?

சமயங்களுக்குள் முரண்பாடும் மோதலும் இல்லை. அடிப்படைத் தத்துவ அமைப்பினைக் கூர்ந்து நோக்கினல் முரண்பாடுகளுக்கும் மோதுதலுக்கும் இடமே இல்லை. முரண்பாடு களும் மோதுதல்களும் இடைநின்றவர்கள் தத்தம் சுயநலம் கருதியே உண்டாக்கப் பெற்றவைகளாக உள்ளன.

வேறு ஒரு விடை: சமயம் என்பது வாழ் வியல் முறை. வாழ்ந்து பயன்பெற வேண்டிய தற்கு ஒத்த நெறிமுறை.

மனிதன் அறிவியல் வளர்ச்சிக்கு இணைந்து கொடுத்தே வாழவேண்டிய நிலையை உடைய வன். எனவே அறிவு வளர்ச்சியும் வாழ்வின் நெறிமுறை வளர்ச்சியும் இணைய வேண்டும்.

மனிதனின் அறிவு வளர்ச்சியை அடிப்படை யாகக் கொண்டு அறிவோடு இணைந்தும், அறிவை வளர்த்தும், அறிவினுடைய முழுமையை அடைய வைத்தும் பாடுபட வேண்டிய பொறுப்பு சமயத்தைச் சார்ந்தது.

நெல்லை அரிசியாக ஆக்குவதற்கு மூன்று முறை நனைத்துக் காயவைக்க வேண்டியிருக் கிறது. அறிவின் படிநிலை வளர்ச்சியை உட் கொள்ளும்போது சமய அமைப்புக்கள் வெவ் வேறு வடிவம் கொள்கின்றன.

"மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்' என்று சொல்வது ஒருவகை வாழ்வியல் அனுபவசாலிகளுக்கு. அதுவும் வெறுத்த நிலையில் தோன்றிய அறிவு வளர்ச்சி உள்ளவர் களுக்கு, 'எண்ணில் நல்ல கதிக்கு யாதும் ஓர் குறைவுஇலை; கண்ணில் அஃது உறும்" என்ற கருத்தைக் கூற வேண்டியுள்ளது. இதனைச் சாத்திர வழக்கில் 'அதிகாரி பேதம்' என்பர்.

எஸ். வைத்தியநாதன், மாயூரம்.

வினு : ஊழ்வினைப் பயனை ஏற்றுக்கொள்ளும் சமயவாதி, சமநிலைச் சமுதாய அமைப்பை உரு வாக்க முடியுமா ?

ஊழ்வினைப் பயனை ஏற்றுக்கொள்ளும் திருவள்ளுவர் சமநிலைச் சமுதாய அமைப்பை உருவாக்கும் வழிவகைகளைச் சொல்கிருர். இன்னும் ஒருபடி மேலே சென்று, சமநிலைச் சமுதாயத் துய்ப்பு முறையையுங்கூட உருவாக்கி விட முடியும் என்று விளக்கங் கூறுகிருர். "இடுக்கண் வருங்கால் நகுக" என்ற திருக்குறள் அதை நோக்கி எழுந்ததே.

லா. மு. இராகவன், வள்ளலார் நகர்

வினு : தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் சோவியத் யூனியனுக்குச் சென்று வந்திருக்கிருர்கள். அங்கே கடவுள் நம்பிக்கை யில்லாப் பொதுவுடைமை வாதிகள் படைத் திருக்கும் வறுமையற்ற புதிய சமுதாயத்தையும் கண்டுவந்திருக்கிருர்கள். அத்தகைய நாட் டினைக் கண்கூடாகக் கண்ட பிறகும் அடிகளார் அவர்கள் மதவாதியாக அல்லது கடவுள் நம்பிக்கை உடையவராக இருக்கும் காரணம் என்ன?

தவத்திரு குன்றக்குடி அடிகளார் மதவாதி யல்லர். தத்துவங்களை எண்ணித் தலையடித்துக் கொள்ளாதே என்ற வாக்குக்கிணங்க வாதத் தின் மையப் பொருளாக மதத்தை அமைக்கும் தார்க்கிகர் அல்லது மதவாதியும் அல்லர். சமயக் கணக்கர் என்று கூறும் வழக்கை நோக்குக.

அவ்வாறே கடவுள் நம்பிக்கையுடையவர் அடிகள் என்பதும் பொருந்தாக் கூற்று. கடவுள் வேறு; கடவுளைப் பற்றிய நம்பிக்கை வேறு; அது மட்டுமா? கடவுள் நம்பிக்கைவேறு. அதனை உடையவராக இருத்தல் வேறு. பொருள் வேறு; பொருளை உடையவர் வேறு. பொருளுடையவனை விட்டு விட்டுப் பொருளா னது விலகுவதுபோல சூழ்நிலை அமையுமானுல் கடவுள் நம்பிக்கையும் அதனை உடையவனை விட்டு நீங்கி விடும்.

அடிகள் கடவுளை வாழ்வாகவும் வாழ்முதற் பொருளாகவும் கொண்டு அனுபவிக்கிறவர்கள். வெங்காயம் சாப்பிட்டு வளர்ந்தவனுடைய உடலானது வெங்காய மயமாகி அதன் நாற் றத்தை வெளிப்படுத்துவது போல, சிவத்தை அனுபவப் பொருளாக அமைத்துக் கொண்ட தால் சிவமணம் கமழும் திருமேனி பெற்றவர். சிவமணம் கமழ்தல் என்ருல் மூக்கைத் தொட வேண்டாம். பகைவனும் நேர்நிற்பின் மருது திருவடிகளில் வீழ்ந்து வணங்க வைப்பதே சிவமணம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# நம்பியாண்டார் நம்பி-கலித்துறைத் திருவந்தாதி

(குன்றக்குடி ஸ்ரீ ஆறுமுகத்தம்பிரான் பதவுரையுடன்)

பிரதி செய்தவர் : சேக்கிழார்தாசன்

சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்

உத்தமத் தானத் தறம்பொரு
 ளின்ப மொடி யெறிந்து
வித்தகத் தானத் தொருவழிக்
 கொண்டு விளங்கச் சென்னி
மத்தம்வைத் தான்றிருப் பாத
 கமல மலரடிக்கீழ்ச்
சித்தம் வைத் தாரென்பர் வீடுபே
 றெய்திய செல்வர்களே. 72

(இ-ள்): இம்மையில் வீட்டின்பமடைந்த சிவஞானச் செல்வர்களே; உத்தமமாகிய சிவ புண்ணியத்தினுல் அறம்பொருளின்ப மாகிய காட்டை யொடித் தெறிந்து; மேன்மை யான இதயம் கண்டம் நாவினடி புருவமத்தி யம் பிரமரந்திரம் என்னும் ஐந்து தானங் களினுள்ள கமலங்களுக்கு மேலான மார்க் கத்தில் சுழு முனே திறந்து கும்பிக்கும் அப்பி யாசத்தாற் சென்று;-விளங்கும்படி சிரசில் மத்தம் பூவை முடித்த சிவபிரானது திருவடித் தாமரைகளென்னும் பரை வியாபகத்துள் அடங்கி; சித்தத்தை ஒடுக்கி நின்றவர்கள் என்று அறிஞர்கள் கூறுவர். எ-று ஏ-அசை.

தானமென்றது ஈண்டு அறமெனும் பொருள்பட நின்றது அன்றிச் சர்வ சங்க பரித்தியாகம் எனினும் மொக்கும். உத்தமத் தானம் என்புழித் தகரம் எதுகை நோக்கி விரிந்தது.

திருவாரூர்ப் பிறந்தார்

செல்வந் திகழ்திரு வாரூர்
 மதில் வட்டத் துட்பிறந்தார்
செல்வன் றிருக்கணத் துள்ளவ
 ரேயத ஞற்றிகழச்
செல்வம் பெருகுதென் ஞரூர்ப்
 பிறந்தவர் சேவடியே
செல்வ நெறியுறு வார்க்கணித்
 தாய செழுநெறியே. 73

(இ-ள்): செல்வம் விளங்கிய திருவாரூர்த் திருநகர் மதில் வட்டத்துட் பிறந்தவர்கள்; சிவபிரான் திருக்கணத்திற் சேர்ந்தவர்கள் அதனுல்; விளங்கிய உயர்ந்த வளம் மிக்க தெற்கின்கணுள்ள அத்திருவாரூர்ப் பிறந்த வர்களுடைய திருவடியே; வீட்டு நெறியை அடைவார்க்குச் சமீபித்த நல்லமார்க்கம். எ-று. ஏ-அசை.

முப்பொழுதுந் திருமேனி தீண்டுவார்

நெறிவார் சடையரைத் தீண்டிமுப்
 போதுநீ டாகமத்தி
னறிவால் வணங்கியர்ச் சிப்பவர்
 நம்மையு மாண்டமரர்க்
கிறையாய்முக் கண்ணுமெண் டோளுந்தரித்
 தீறில் செல்வத்தொடு
முறைவார் சிவபெரு மாற்குற
 வாய வுலகினிலே. 74

(இ-ள்): நெறித்த நீண்ட சடையையுடைய சிவபிரானை மூன்று காலமும் பரிசித்து உயர்ந்த சிவாகம உணர்வினுல்; வணங்கி யர்ச்சித்து வழிபாடு செய்கின்றவர்; எம் தரத்தினரையும் அடிமை கொண்டு தேவர் களுக்கு முதல்வராய்; மூன்று கண்களையும் எட்டுப் புயங்களையுந் தாங்கி; சிவபிரான் வசித்தற்குரிய சிவலோகத்தில்; அழியாத செல்வத்தோடும் வசிப்பர். எ-று ஏ-அசை.

முழுநீறு பூசிய முனிவர்

உலகங் கலங்கினு மூழி திரியினு
முள்ளொருகால்
விலகுத லில்லா விதியது
பெற்றநல் வித்தகரா
ணலகில் பெருங்குணத் தாரு
ரமர்ந்த வரனடிக்கீ
ழிலகுவெண் ணீறுதம் மேனிக்
கணியு மிறைவர்களே. 75

(இ-ள்): உலகம் சலப் பிரளயத்தால் கலக்க மடைந்தாலும் ஊழி காலத்தால் மாறுபடினும்; தம்முடைய சித்தம் ஒருகாலத்தும் வேறுபடாத; நியம விதியைப் பெற்ற நல்லறிவினையுடையவர் யாரெனில்; அளவு படாப் பெரிய என் குணங்களையுடைய; திருவாரூரின்கண் வீற்றிருந்தருளும் சிவபிரான் திருவடி நிழலின்கீழ்; விளங்கிய திருவெண்ணீற்றை விதிப்படி தம் திருமேனியிற் றரிக்கும் முதன்மையையுடையோர் எ-று. காண், ஏ-அசை.

அப்பாலுமடிச் சார்ந்தார்

வருக்க மடைத்து நன் னாவலூர்
மன்னவன் வண்டமிழாற்
பெருக்கு மதுரத் தொகைபிறை
சூடிதன் பெய்கழற்கே
யொருக்கு மனத்தொடப் பாலடிச்
சார்ந்தவ ரென்றுலகிற்
றெரிக்கு மவர்சிவன் பல்கணத்
தோர்நஞ் செழுந்தவரே. 76

(இ-ள்): அடியார்களை வரிசையாக வைத்துத் திருநாவலூரில் அவதரித்த நம்பியாரூரர்; ஒருப்பட்ட மனதுடன், இளம்பிறையைச் சூடிய சிவபிரானது திருவடிக்கு; வளவிய தமிழினால் மதுரமிக்கத் திருத்தொண்டத் தொகை அருளிச் செய்யுமிடத்து; அப்பாலுமடிச்சார்ந்தவரென்று உலகிற் கூறப்பட்டவர்கள் யாரெனில்; சிவபிரான் பலகணங்களுள் உள்ளிட்டாராகிய நமது உயர்ந்த தவத்தையுடையவர்கள் எ-று ஏ-இரண்டும். அசை.

* பெருக்கு மதுரத்தொகையிற் பிறைசூடி பெய்கழற்கே- (பாடபேதம்) உலகில் அருளிச் செய்யுமிடத்துக் கூறப்பட்டவனைக் கூட்டுக.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் துதி

செழுநீர் வயன்முது குன்றினிற்
செந்தமிழ் பாடிவெய்ய
மழுநீள் தடக்கைய னீந்தபொன்
னாங்குக் கொள் ளாதுவந்தப்
பொழினீ டருதிரு வாரூரில்
வாசியும் பொன்னுங் கொண்டோன்
கெழுநீள் புகழ்த்திரு வாரூர
னென்றுநாங் கேட்பதுவே. 77

(இ-ள்): செழுமையாகிய நீர் வளந்தங்கிய வயல் சூழ்ந்த திருமுது குன்றில்; செப்பமான திருப்பதிகம் பாடி கொடிய மழுப்படை தங்கிய நீண்ட திருக்கரத்தையுடைய சிவபிரான் கொடுத்த பொன்னை அத்திருமுது குன்றத்தில் தாம் பெற்றுக் கொள்ளாமல்; மணிமுத்தாற்றில் இட்டுச் சோலைகள் உயர்ந்த அந்தத் திருவாரூரில் வந்து; தாம் இட்ட பொன்னுக்கு மாற்றுக் குறையுங்கால் தன் வாசியையும் பொன்னையுங் குறையாமற் கொண்டவர்; மிக்க புகழினையுடைய நம்பியாரூரரென்று நாம் கேள்விப்பட்டது. எ-று. ஏ-அசை.

பூசலார் நாயனார்

பதுமநற் போதன்ன பாதத்
தரற்கொரு கோயிலையான்
கதுமெனச் செய்குவ தென்று
கொலாமென்று கண்டுயிலா
ததுமனத்தே யெல்லி தோறு
நினைந்தருள் பெற்றதென்பர்
புதுமணத் தென்ற லுலா நின்ற
வூர்தனிற் பூசலையே. 78

(இ-ள்): புதிய மலர்மணத்தை யளைந்த தென்றற் காற்றுச் சஞ்சரிக்கின்ற திருநின்றவூரில் அவதரித்த பூசலார் நாயனார்; திருவருளைப் பெற்றது நல்ல செந்தாமரை மலரை யொத்த திருவடிகளையுடைய சிவபிரானுக்கு ஒரு திருக்கோயிலை நான் விரைவிற் செய்து முடிப்பது; என்றைக்கு ஆகுமோ என்று உறங்காது; அவ்வாலயத் திருப்பணியைத் தமது இதயத்தில் இரவுதோறுஞ் செய்வதாய் நினைந்தருளி; என்று அறிஞர் கூறுவர் எ-று. ஏ-அசை.

உ

குன்றக்குடி

# அருள்மிகு ஆறுமுகப் பெருமான்

# பாமாலை

மரு. பரமகுரு

பிஞ்சு வயதில் பெருமான் நினது பெருங்கருணை
கொஞ்சம் கலந்தேன் கொடியேன் பிரிந்தேன் குமையிருளில்
அஞ்சிக் கிடந்துழல் கின்றேன் எளியனேன் ஆறுமுகா
தஞ்சம்நின் தாள்மல ரன்றிஒன் றில்லை தயாபரனே. (85)

அலைவைத்த நெஞ்சக் கடலில் திரிகின்ற ஐம்புலனும்
கொலைவைத்த தீச்சுருத் துள்ளலால் எற்றுண்டு கொள்கைவிட்டு
நிலைவைத்த வாழ்க்கைக் குலைவைத்து விட்டேன் நெடுமயிலில்
கலைவைத்த நின்தாள் கதியாம்குன் றக்குடிக் காவலனே. (86)

கண்ணிருந் துங்குரு டாகிவிட் டேன்நீண்ட காலிருந்தும்
மண்ணிருந் தேஅசை முண்டமா னேன்உனை வந்துகாணேன்
விண்ணிருந் தேபொழி மாமழை போலருள் மிக்கிருந்த
கண்ணிருந் தாய்குன்றைக் கற்பக மேஎனைக் காத்தருளே (87)

இப்பாழ்ப் பிறவியை ஏனெடுத் தேன்அந்தோ இவ்வுலகத்(து)
எப்பாலும் துன்பத் தொடக்குகண் டேன்சூழ் துயர்நெருப்பில்
தப்பிப் பிழைப்பதென் றோஅடி யேன்அண்டம் தாவியதற்(கு)
அப்பாலும் சென்றுசூர் அட்டவேல் கைக்கொண் டருள்பவனே. (88)

நானு வகையிலும் நான்பட்ட பாடு நனியறிவாய்
ஊனை உருக்கி உளத்தைக் கருக்கி ஒருசிறிதும்
ஆனதொன் றில்லை அடியேன் பிழைத்தேன் அமரர்தொழும்
சேனு பதிநின் திருவடி யேதுணை தெய்வதமே. (89)

நில்லாத வற்றை நிலையென் றுணர்ந்து நிலைகலங்கி
அல்லாடி யந்தோ அயர்ந்துவிட் டேன்இனி ஆற்றகில்லேன்
கல்லாலின் கீழன்று நால்வருக் குண்மையைக் காட்டியவோர்
வல்லாளன் மைந்தாகுன் றக்குடி ஞான மணிவிளக்கே. (90)

கறைக்கண்டன் மைந்தா கருணு நிதியே கடுவிதியை
அறைக்கின்ற தாமரைத் தாள்தலை வைத்தருள் ஐய, இனிப்
பிறக்கின்ற வாறே பிழைத்துவிட் டேன்நான் பிறப்பெடுத்தால்
உறைப்பாக நின்தாள் மறவா திருக்க உவந்தருளே. (91)

நரம்புதோல் என்பு தசையினு லாகிய நாறுபுழுக்
குரம்பையுள் நின்றுழல் என்னுயிர் கூற்றுவன் கொள்ளுமுன்னம்
வரம்புக்குள் இல்லாத வானருள் தெய்வமே மாணடியென்
சிரம்தங்கச் செய்தருள் குன்றக் குடிமலைச் செம்மணியே. (92)